

# அம்புலிமாமா

மதிமுகம் : 109 மார்ச் : 2005 புன்னகை : 03



## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக


















SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
**No. 82, Defence Officers Colony**
**Ekkatuthangal,**
**Chennai - 600 097**
**E-mail :**
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900 /- இந்தியாவிற்குள் ரூ.144 /- **புக்போஸ்டில்** உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# சுற்றுச்சூழல் பாதுகாப்பு

நடுக்கடலில் ஏற்பட்ட நில நடுக்கத்தை அடுத்து, கடலில் தோன்றிய சுனாமி என்ற அரக்கன் இரண்டரை லட்சத்துக்கும் அதிகமான அப்பாவி மக்களின் உயிரைக் குடித்த கோர நிகழ்ச்சியை சமீபத்தில் கண்டோம்.

இந்த நிகழ்ச்சி நடந்து ஒரு மாதத்திற்குள், ஐரோப்பா, மத்திய கிழக்கு நாடுகள், அமெரிக்கா போன்ற இடங்களில் எதிர்பாராத அளவு பலத்த மழை பெய்து பெரும் சேதத்தை உண்டாக்கியது. இந்தியாவின் வட பகுதிகளில் பயங்கரக் குளிரும், மூடுபனியும் சொல்லொணாத இடையூறுகளை உண்டாக்கியது. சுனாமியின் பாதிப்புக்குள்ளான இடங்களில் எல்லாம், மீண்டும் மீண்டும் நில நடுக்கம் தோன்றிக் கொண்டேயிருந்தது.

சமீபகாலமாக இயற்கையின் முக்கிய அங்கங்களான நீர், நிலம், பூமி ஆகியவற்றின் விசித்திரமான நடவடிக்கைகளுக்கு உலகெங்கும் உள்ள விஞ்ஞானிகளும் அறிஞர்களும் பல விளக்கங்கள் கூறுவதில் மும்முரமாக உள்ளனர். இயற்கைக்குப் புறம்பான நமது மனித வர்க்கம் இயற்கையின் புனிதத்தை மாசுபடுத்தும்படிச் செய்யும் நாசவேலைகளே இயற்கையின் சீற்றத்துக்குக் காரணம் என்று மட்டும் நமது அறிவுக்குப் புலன்படுகிறது.

இனியாவது நாம் வாழும் பூமியையும், சுற்றுச்சூழலையும் ஒழுங்காகப் பராமரிக்கும் முயற்சிகளில் ஈடுபடுவோம். காடுகளை அழிப்பதையும் காற்று மண்டலத்தையும் நீர்நிலைகளையும் மாசுபடுத்தும் செயல்களையும் இனியாவது தவிர்ப்போம். இயற்கையை நமது ஆதிக்கத்திற்கு உட்பட்டு உடக்க முயற்சிக்காமல் இயற்கைக்கு கட்டுப்பட்டு நடப்போம்.

மார்ச் 21ந் தேதி பூமி தினமாகவும், மார்ச் 22ந் தேதி நீர்நிலைகள் தினமாகவும் கொண்டாடப்படவிருக்கின்றன. அவற்றை உண்மையாக மனப்பூர்வமாகக் கொண்டாட முயற்சி செய்வோம்.

ஆசிரியர் : **விஸ்வம்**

**Visit us at : http://www.chandamama.org**



**Statement about Ownership of**
**AMBULIMAMA (Tamil)**
Rule 8 (Form VI). Newspaper (Central) Rules. 1956

1. **Place of Publication**
   82 Defence Officers Colony
   Ekkatuthangal, Chennai-600 097
2. **Periodicity of Publication**
   MONTHLY
   1st of each calendar month
3. **Printer's Name**
   B. VISWANATHA REDDI
   **Nationality**
   INDIAN
   **Address**
   82 Defence Officers Colony
   Ekkatuthangal, Chennai-600 097
4. **Publisher's Name**
   B. VISWANATHA REDDI
   **Nationality**
   INDIAN
   **Address**
   82 Defence Officers Colony
   Ekkatuthangal, Chennai-600 097
5. **Editor's Name**
   B. VISWANATHA REDDI
   (Viswam)
   **Nationality**
   INDIAN
   **Address**
   82 Defence Officers Colony
   Ekkatuthangal, Chennai-600 097
6. Name and Address of individuals who own the newspaper
   Chandamama India Ltd.
   Board of Directors:
   1. P. Sudhir Rao
   2. Vinod Sethi
   3. B. Viswanatha Reddi
   82 Defence Officers Colony
   Ekkatuthangal, Chennai-600 097

*I,* **B. Viswanatha Reddi,** *do hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

(Sd.) B. VISWANATHA REDDI
1st March 2005 *Publisher*



# அதிசய ஓவியம்

சிங்கபுரியில் வசித்து வந்த லட்சுமணனுக்கு மூன்று பிள்ளை களும், மூன்று பெண்களும் இருந்தனர். அனைவருக்கும் திரு மணமாகி சிங்கபுரியிலேயே வசித்து வந்தனர். லட்சுமணனுக்குப் பல ஆண்டுகளாகத் தன்னுடைய உருவப் படம் ஒன்றை வரைந்து கொள்ளும் ஆசை இருந்தது. ஆனால் அப்படிப் பட்ட ஓவியன் யாரும் அந்த கிராமத்தில் இல்லை. தன்னுடைய பேரன்களில் அவருக்குப் பிடித்த மான சங்கரனை சிறு வயதிலிருந்தே ஓவியம் கற்றுக் கொள்ளுமாறு லட்சுமணன் வற்புறுத்தி வந்தார். ஆனால் ச ங்கரனுக்கு ஓ வியக் கலையில் மனம் செல்லவில்லை.

சங்கரனுக்கு வயது பதினெட்டான போது, லட்சுமணன் மிகவும் உடல் நலம் குன்றி படுக்கையில் வீழ்ந்தார். ஒருநாள் அவர் சங்கரனை தன்னிடம் அழைத்து ''சங்கரா! நான் இனி உயிர் பிழைக்க மாட்டேன் என்று தோன்றுகிறது. இறப்பதற்கு முன் என்னுடைய உருவப்படம் ஒன்றை உருவாக்கும் ஆசை நிறைவேறாது என நினைக்கிறேன்'' என்று வருத்தத் துடன் கூறினார். அதைக் கேட்ட சங்கரன், ''கவலைப்படாதே தாத்தா! நான் நகரத்திற்குச் சென்று ஒரு நல்ல ஓவியக்கலைஞரை உங்களுக்காக அழைத்து வருகிறேன்'' என்றான்.

''சரி சங்கரா! ஆனால் என்னை மட்டும் ஓவியம் வரையச் சொன்னால் மற்றவர்கள் 'கிழவனின் ஆசையைப் பார்' என்று கேலி செய்யலாம். நம் குடும்ப அங்கத் தினர்கள் சுமார் முப்பது பேர் உள்ளனர். என்னுடையதும் சேர்த்து அனைவரது உரு வப்படமும் ஒ ரே படத்தில் வரைந்தால் நன்றாக இருக்கும்'' என்றார்.

சங்கரனும் ஓவியரைத் தேடி நகரத்திற்குச் சென்றான். ஆனால்

-கமலநாதன்-



அவன் எதிர்பார்த்தபடி ஓவியம் வரைய எந்த ஓவியரும் தயாராக இல்லை. சுமார் முப்பது நபர்களின் உருவங்கள் ஒரே படத்தில் வருமாறு ஓவியம் தீட்டுவது மிகவும் கடினமான வேலை என்றும் அதற்கு சுமார் பத்தாயிரம் ரூபாய் செலவாகும் என்றும் தெரிவித்தனர். தனது முயற்சிகள் தோல்வியுற்றதைக் கண்டு சங்கரன் ஏமாற்றமடைந்து தனது கிராமம் திரும்ப நினைக்கையில், அவன் கண்ணன் என்ற வாலிபனைச் சந்திக்க நேரிட்டது.

கண்ணனிடம் ஒரு அதிசய இயந்திரம் இருந்தது. அந்த இயந்திரத்தில் ஒரு வெள்ளைத் துணியைப் பொருத்திவிட்டு, அதன் வழியே யார் யாரை ஓவியம் தீட்ட வேண்டுமோ அவர்களைப் பார்த்து, சில மந்திரங்களை உச்சரித்தவுடன், அவர்களுடைய உருவப்படங்கள் வெள்ளைத் துணியில் புகைப்படம் போல் அச்சாகப் பதிந்து விடும். கண்ணன் சங்கரனிடம் ''உன் விருப்பத்தை நிறைவேற்ற என்னால் முடியும். எனக்கு ஐம்பது ரூபாய் கொடுத்தால் போதும்'' என்றான்.

அதைக் கேட்டு ஆச்சரியமடைந்த சங்கரன், ''உனக்கு அந்த இயந்திரம் எப்படிக் கிடைத்தது?'' என்று கேட்டான். அதற்குக் கண்ணன், ''எனது மாமன் மந்திர தந்திரங்களில் வல்லவர். ஓராண்டுக்கு முன் அவர் இந்த இயந்திரத்தை உருவாக்கி எனக்குத் தந்தார். என்னுடைய குடும்பத்தினர் அனைவரது உருவங்களையும் ஒரே படத்தில் இந்த இயந்திரத்தின் மூலம் வரைந்துள்ளேன். பார்'' என்று கூறி தன் குடும்பப் படத்தையும் காட்டினான். அவன் குடும்பத்தினர் அனைவரது முகங்களும் தெளிவாகத் தெரிந்தன. ஆனால் ஒரே ஒரு நபர் உருவம் மட்டும் அஷ்டக் கோணலாக ஒரு கோமாளியைப் போல் தோற்றமளித்தது. ''இத்தனை நபர்களுக்கு மத்தியில், இவர் ஒருவர் மட்டும் ஏன் இப்படி கோமாளி போல் இருக்கிறார்?'' என்று சங்கரன் கேட்டான். ''இந்த இயந்திரத்தின் மூலம் படம் பிடித்தால், யாராவது ஒருவர் முகம் மட்டும் இப்படியாகி விடும்'' என்றான் கண்ணன்.

''அப்படியா?'' என்ற சங்கரன், ''என் தாத்தாவுக்குத் தான் தன்னுடைய உருவத்தை ஓவியமாக வரைய வேண்டுமென்று ஆசை. ஆனால்

திருஷ்டி பரிகாரம் போல் கடைசியில் அவர் முகம் இப்படிக் கோணலாக வந்து விட்டால் என்ன ஆவது? '' என்று கேட்டான். அதற்கு கண்ணன், ''நீ விரும்பினால் உன் முகம் மட்டும் விகாரமாக இருக்கும். உன் தாத்தாவின் படம் நிச்சயம் நன்றாக அமையும். சம்மதமா?'' எனக் கேட்க, சங்கரனும் சரியென்றான்.

கண்ணனுடன் சங்கரன் தன் கிராமத்தை அடைந்தான். கண்ணன் தன் இயந்திரத்தை தோட்டத்தில் நிறுத்தி வைத்து, அதில் வெள்ளைத் துணியைப் பொருத்தினான். சங்கரனின் தாத்தா லட்சுமணன் உட்பட அவனுடைய குடும்பத்தினர் அனைவரும் இயந்திரத்தின் முன் நின்றனர். கண்ணன் இயந்திரத்தின் மூலம் அவர்கள் அனைவரையும் உற்று நோக்கிவிட்டு, மந்திரம் உச்சரித்தான். பிறகு அந்த வெள்ளைத் துணியை வெளியே எடுக்க, அங்கு கூடியிருந்த அனைவரது உருவங்களும் அதில் பதிவாயிருந்தன. தனது உருவத்தை அதில் நோக்கிய சங்கரன் திடுக்கிட்டான். அவனைத் தவிர அனைவரும் அழகாக இருந்தனர்.

கண்ணன் அவனிடம், ''உன்னுடைய தாத்தாவின் உருவப்படம் எப்படி இருக்கிறது?'' என்று அவன் கேட்க, சங்கரன்,'' நான் குறிப்பாக அவருடையதைப் பார்க்கவில்லை. என் படத்தைப் பார்த்து எல்லாரும் சிரிக்கப் போகின்றனர். அதை நினைத்துத்தான் கவலைப்படுகிறேன்'' என்றான். அதற்குள் மற்றவர்கள் அந்த படத்தைப் பிடுங்கிக் கொண்டு தாங்கள் எப்படி உள்ளனர் என்பதை போட்டி போட்டுக் கொண்டு பார்க்கத் தொடங்கினர்.

கண்ணன் சங்கரனிடம் ''பார்த்தாயா? எல்லாரும் தான் எப்படி படத்தில் இருக்கிறோம் என்பதை அறிய ஆவலாக இருக்கின்றனரே தவிர மற்றவர்களைப் பற்றி ஆர்வம் காட்டுவதில்லை. இதுதான் மனித இயல்பு. படத்தில் உன் முகத்தைப் பார்த்துவிட்டு எல்லாரும் சிரிப்பார்கள் என்று நீ ஏன் வீணாக சஞ்சலப்படுகிறாய்? '' என்று கேட்டான்.

சங்கரனுடைய கவலை இப்போது நீங்கியது. அவன் கேட்டதற்கு மேலேயே பணம் தந்து அனுப்பி வைத்தான்.





# உழைப்பின் மகத்துவம்

அன்றிரவு குழந்தைகள் சாப்பிட்டு முடித்தவுடன் வழக்கம்போல் தங்கள் பாட்டியை சூழ்ந்து கொண்டு கதை சொல்லுமாறு வற்புறுத்தினர். பாட்டியும் கதை சொல்லலானாள்.

கங்காபுரியில் ரத்தினம் என்ற விவசாயி இருந்தான். அவனுக்கு வீரன், மாணிக்கம் என்று இரண்டு பிள்ளைகள் இருந்தனர். வீரன் சிறு வயது முதலே சுத்த சோம்பேறி. எந்த மாணிக்கம் நல்ல உழைப்பாளி. விவசாய வேலைகளில் தன் தந்தைக்குப் போருதவி செய்து வந்தான். தவிர தயாள குணமும், நல்ல நடத்தைகளும் உடையவன். ரத்தினத்திடம் நாலு ஏக்கர் நிலம் இருந்தது. அதில் இரண்டு ஏக்கர் தரிசு நிலமாக இருந்தது.

சில ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு நாள் ரத்தினம் உடல் நலம் குன்றி படுத்த படுக்கையானான். தன் இளைய மகன் மாணிக்கத்தை அழைத்து, ''மாணிக்கம், இனி அதிக நாள் நான் உயிருடன் இருக்க மாட்டேன். எனக்கு உன்னைப் பற்றிக் கவலையில்லை. ஆனால் சோம்பேறியான உன் அண்ணன் வீரனை, எண்ணி நான் மிகவும் கவலைப் படுகிறேன். நீ எனக்காக ஒரு தியாகம் செய்வாயா?'' என்று கேட்டான்.

''எதுவாயிருந்தாலும் சொல்லுங்கள் அப்பா'' என்றான் மாணிக்கம். ''மாணிக்கம், த ரிசு நி லத்தை நீ எடுத்துக் கொள். உன் உழைப்பினால் அதை வி ளையும் நி லமாக ம ாற்ற உன்னால் முடியும். நல்ல நிலத்தை உன்னுடைய அண்ணனுக்குக் கொடுத்து விடு. தவிர அவன் எத்தனை தவறு செய்தாலும், அவனை மன்னித்து அவனுக்கு உதவியாக இரு'' என்றான் ரத்தினம். இது நடந்து சில நாட்களில் ரத்தினம் இறந்து போனான்.

தன் தந்தையின் வாக்கிற்கு இணங்க, நல்ல நிலத்தையும் வீட்டையும் வீரனுக்குக் கொடுத்து

விட்டு, தரிசு நிலத்தை மாணிக்கம் எடுத்துக் கொண்டான். அதன் அருகிலேயே தான் வசிக்க ஒரு குடிசையும் அமைத்துக் கொண்டான். மாணிக்கத்தின் நிலத்தருகில் ஒரு நெல்லி மரம் இருந்தது. அதில் ஒரு தேவதை வசித்து வந்தாள். இரவு பகல் பாராமல் கடுமையாக உழைக்கும் மாணிக்கத்தின் பேரில் அவளுக்கு இரக்கம் உண்டாகியது. ஆகையால் அந்த நிலத்தில் நல்ல விளைச்சல் உண்டாக ஆசீர்வதித்தாள். தேவதையின் ஆசீர்வாதமும், மாணிக்கத்தின் உழைப்பும் சேர்ந்து அந்தத் தரிசு நிலத்திலும் அமோகமான விளைச்சலை உண்டாக்கியது.



மாணிக்கத்தின் அண்ணன் வீரன் வழக்கப்படி சோம்பேறியாகவே இருந்து தன் நிலத்தை ஒழுங்காக கவனிக்காமல் இருந்ததால், அதில் போதிய விளைச்சல் இல்லாமல் போனது. ஒருநாள் தன் தம்பியின் வளர்ச்சியைக் கண்டு பொறாமை கொண்ட வீரன் மாணிக்கத்திடம் வந்து, ''மாணிக்கம், நமது தந்தை செய்தது தவறான செயல். பாறைகள் நிறைந்த நிலத்தை உனக்கு அளித்து விட்டு எனக்கு நல்ல நிலத்தைக் கொடுத்து விட்டார். அந்த தவறை சரி செய்ய வேண்டும். நாமிருவரும் நம்முடைய நிலங்களை மாற்றிக் கொள்வோம்'' என்று நடித்தான். தன் அண்ணனுக்கு உதவ விரும்பி அவ்வாறே செய்ய சம்மதித்தான்.

இந்த செய்தி பஞ்சாயத்துத் தலைவர் பூஷணத்தின் செவிகளை எட்டியது. மாணிக்கத்தின் மேல் நல்ல அபிப்பிராயம் கொண்டிருந்த பூஷணம், வீரனைக் கூப்பிட்டு அவனுடைய வஞ்சகச் செயலுக்காக அவனைக் கண்டித்தார். பிறகு பூஷணம் மாணிக்கத்தை அடைந்து அவனிடம் ஒரு அரிசி மூட்டையை அன்பளிப்பாக அளித்து விட்டு ''மாணிக்கம். உன்னுடைய தயாள குணத்தை மிகவும் பாராட்டுகிறேன். உன்னை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. உனக்கு என் மகளை திருமணம் செய்து வைத்து என் வீட்டோடு உன்னை மருமகனாக்க ஆசைப்படுகிறேன்'' என்றார்.

''ஐயா, உங்கள் மகளைத் திருமணம் செய்து கொள்ள எனக்கு சம்மதம். ஆனால் அவளுக்கு ஒரு புடவை வாங்கித் தரக்கூட இயலாத நிலையில் நான் இருக்கிறேன். நன்றாக நிலத்தில் பாடுபட்டு

உழைத்து, நிறையப் பணம் சேர்த்த பின், உங்கள் மகளை மணம் செய்து கொள்வேன். அதுவரை பொறுத் திருங்கள்'' என்றான் மாணிக்கம். அவனது மனப்பாங்கைக் கண்டு பூஷணம் மகிழ்ச்சி அடைந்தார்.

நெல்லி மரத்தில் வசித்து வந்த தேவதையும் மாணிக்கத்தின் தியாகச் செயலையும் அபிமானத்தையும் கண்டு பெரிதும் மகிழ்ச்சியுற்றாள். மாணிக்கத்திற்கு அவனறியாமலே பெரிய பரிசு தர விரும்பினாள். ஒருநாள் மாணிக்கம் தன் நிலத்தை உழும்போது, தங்கக் காசுகள் நிறைந்த ஒரு குடம் கிடைத்தது.

அதை உடனே எடுத்துப் போய் பஞ்சாயத்துத் தலைவரான பூஷணத் திடம் காட்டினான். அதைக் கண்டு பிரமித்துப்போன பூஷணம், ''தம்பி, உன்னுடைய நாணயத்தையும் உழைப்பையும் தியாகத்தையும் பாராட்டி ஏதோ ஒரு வனதேவதை உனக்குத் தந்த பரிசு இது என்று எண்ணுகிறேன். இது உனக்கே சொந்தமாகும். இப்போது நீ என்னை விடப் பணக்காரனாகி விட்டாய். இப்போது என் மகளை மணம் புரிய சம்மதமா? '' என்றார். மாணிக்கம் தான் கொடுத்த வாக்கு தவறு வதில்லை என்று உறுதியளித்தான். மாணிக்கத்தின் பாக்கியத்தை அறிந்த வீரனுக்கு இப்போது தன் தவறு புரியத் தொடங்கியது. தன் தம்பிக்குக் கிடைத்தது அவனுடைய உழைப்பின் பரிசு என்றுணர்ந்த வீரன் மாணிக்கத் திடம் சென்று தன் செய்கைக்காக மன்னிப்புக் கேட்டு அவனிடம் தன் நிலத்தை ஒப்படைத்துவிட்டு கூலி வேலைக்காரனாக இருக்கப் போவ தாகக் கூறினான்.

தன் அண்ணனைத் தழுவிக் கொண்ட மாணிக்கம். ''அண்ணா, அப்படியெல்லாம் பேசாதே. நாமிரு வரும் சேர்ந்து உழைப்போம். இருப்ப தெல்லாம் நமக்குத்தானே'' என்றான்.

இத்துடன் கதையை முடித்த பாட்டி, ''குழந்தைகளே! உழைப்பின் மகத்துவத்தைப் பற்றி இந்த கதை யிலிருந்து தெரிந்து கொண்டி ருப்பீர்கள் என்று நம்புகிறேன்'' என்றாள். குழந்தைகளும் குதூகலத் துடன், ''ஆம் பாட்டி. நாங்கள் கஷ்டப்பட்டு உழைத்துப் படிப் போம்'' என்று உறுதி கூறினர்.





# மாய மந்திரவாதி

## 16

*(மாய மந்திரவாதி துன்முகனை மன்னித்து விடுகிறான். அவன் மாயக்குரங்கைத் தேடுவதில் முனைகிறான். அது ஜீவகுப்தனிடம் சென்றுவிட்டதாக அறிகிறான். காளிவர்மனுடன் மாயக்குரங்கைத் தேடிப் புறப்படுகிறான். இதற்குள் உக்கிரதண்டன் மாயக்குரங்கின் மீது தன் கதையை வீசி எறிய குரங்கு எப்படியோ தப்பித்துக் கொண்டு ஒரு குதிரை மீது ஏறிக் கொள்கிறது. பிறகு...)*

**மா**யக்குரங்கு தன் மீது வீசி எறியப் பட்ட கதையிலிருந்து தப்பித்துக் கொண்டு ஒரு குதிரை மீது தாவி ஏறிக் கொள்கிறது. கதையை கையில் எடுத்துக் கொண்டு மீண்டும் உக்கிர தண்டன் குரங்கின் மீது எறிய, அது குறிதவறிப் போய் குரங்கு சவாரி செய்த குதிரையின் மேல் படுகிறது. கதையினால் அடிபட்ட வலி பொறுக்காமல் குதிரை கனைத்துக் கொண்டே ஓடி மற்றொரு குதிரை மீது மோதிக் கொள்ள, அந்தக் குதிரை மேல் அமர்ந்திருந்த வீரன் நிலை குலந்து கீழே விழுகிறான். உடனே மாயக்குரங்கு தனது அடிபட்ட குதிரையை விடுத்து அந்த மற்றொரு குதிரை மீது தாவி ஏறிக் கொள்கிறது. குதிரை மீதமர்ந்து குரங்கு தப்பி ஓடிக் கொண்டே ஜீவகுப்தனைப் பார்த்து ''ஜீவகுப்தா! உன்னுடைய முயற்சிகள் பலனற்றுப் போய் விட்டன. நான் சந்திரசில நகருக்குப் போய் ஜிதகேது மன்னரிடம் நடந்ததை எடுத்துரைத்து எச்சரிக்கப் போகிறேன்'' என்றது.



கோட்டைக்குள்ளிருந்து வீரா வேசமாக வந்து கொண்டிருந்த மந்திர வாதியையும், காளிவர்மனையும் பார்த்த ஜீவகுப்தன் பயத்தால் நடுங்க ஆரம்பித்தான். அவர்கள் தன்னை நோக்கி வருவதைக் கண்டதும் மேலும் திகில் அடைந்த ஜீவகுப்தன், ''குரங்கே சற்று நில்! அந்த உக்கிர தண்டனும், மந்திரவாதியும் ஒன்று சேர்ந்து விட்டனர். அவர்களிட மிருந்து நம்மையும், நமது அரசனையும் யாராலும் காப்பாற்ற முடியாது. நான் சொல்வதைக் கேள். நாமிருவரும் காட்டுக்குள் சென்று ஒளிந்து கொள்வோம்'' என்று பயத்தால் உடல் பதறக் கூறினான்.

''கோழைகள் தான் அப்படிச் செய்வார்கள். நான் உன்னைப் போல் தொடைநடுங்கி அல்ல. நான் ஜிதகேதுவிடம் சென்று, நடந்ததை விளக்கி, அந்த இரு எதிரிகளையும் முறியடிக்கத் திட்டம் தீட்டப் போகிறேன்'' என்று கூறிக் கொண்டே, குரங்கு குதிரையில் சந்திரசீல நகரை நோக்கி அதிவேகமாக பாய்ந்து சென்றது. ''அடேய் ஜீவகுப்தா!'' என்று கூவிய உக்கிரதண்டன், தொடர்ந்து ''நான் உனக்கோ, சூரியபூபதிக்கோ எதிரி இல்லை. ஆனால் காளிவர்மனை தூக்கிலிடத் திட்டம் போட்டதே நீதான். அதற் காகவே உன்னைக் கொல்ல விரும்பு கிறேன். குதிரையிலிருந்து இறங்கு'' என்று கத்தினான்.

இதற்குள் ஜீவகுப்தன், ''வீரர்களே! இந்த உக்கிரதண்டன் நம்மை எல்லாம் நசுக்கிக் கொல்லுமுன், நாம் தப்பி ஓடி விடுவோம். வாருங்கள் என்னுடன்'' என்று தன் வீரர்களை அழைத்தான். அவனுடைய வார்த்தைகளின்படி, சூரிய பூபதியும் மற்ற வீரர்களும் தங்கள் குதிரைகளைத் திருப்பி, அந்த இடத்தை விட்டுத் தப்பிக்க முயன்றனர். உக்கிரதண்டன் பாய்ந்து சென்று ஒரு குதிரை வீரனை மறித்துப் பிடித்து, அவனை அலாக்காகத் தூக்கினான். ''அற்பப் புழுவே! ஓடு, தப்பியோடு காட்டுக்கு!'' என்று உக்கிரதண்டன் இளக்காரமாக கிண்டல் செய்ய இதற்குள் காளி வர்மனும், மந்திரவாதியும் அருகில் வந்து சேர்ந்தனர்.

எதிரிகள் அனைவரும் தப்பி ஓடுவதைக் கண்ட காளிவர்மன் கோபத்துடன், ''உக்கிரதண்டா! என்ன காரியம் செய்கிறாய்? ஜீவகுப்

தனையும் குரங்கையும் தப்பியோட விட்டு விட்டு, ஒரு சாதாரண போர் வீரனிடம் போய் உன் வீரத்தைக் காட்டுகிறாய்!'' என்றான்.

ஏமாற்றத்துடன் கதையை வீசி எறிந்து விட்டு, தரையில் தொப்பென விழுந்த உக்கிரதண்டன், ''நான் என்ன செய்யட்டும்? எனக்கு ஒரே குழப்ப மாக இருக்கிறது. என் மூளை வேலை செய்ய மறுக்கிறது. அந்த மாயக் குரங்கு தெரிவித்த தகவலைக் கேட்ட பிறகு எனக்கு கையும் ஓடவில்லை. காலும் ஓடவில்லை. என்னுடைய அண்ணனை அந்த குரங்கின் குருவான நித்யா மிஸ்ரன் கொன்று விட்டாராம். அதை எண்ணி என் மனம் தடுமாறுகிறது'' என்றான்.

மந்திரவாதி, ''உன் அண்ணன் பெயர் என்ன?'' எனக் கேட்டான்.

''காலதண்டன். அவனை உனக்குத் தெரியுமா? நீ குறிப்பிடும் அதே கரடிபாத மலையில் தான் அவனும் வசித்து வந்தான்'' என்றான் உக்கிர தண்டன். தான் கேள்விப்பட்ட தில்லை என்று பதிலளித்த மந்திர வாதி தொடர்ந்து, ''உக்கிரதண்டா! அந்த சூனியக்காரன் நித்யா மிஸ்ரன் என்னுடைய குருவை ஒழித்துக்கட்ட முயற்சி செய்கிறான். அதற்காக பல நபர்களைப் பயன்படுத்துகிறான். தனது தீய எண்ணத்தை நிறைவேற்ற பல கீழ்த்தரமான செயல்களையும் புரிந்து வருகிறான். அவனுடைய சீடனான மாயக்குரங்கின் வார்த்தை களை நீ நம்ப வேண்டாம்'' என்றான்.

இந்த வார்த்தைகளினால் சற்றே



ஆறுதலடைந்த உக்கிரதண்டன் தரையிலிருந்து எழுந்து, ''என் அண்ணன் உயிருடன் இருக்கிறான் என்று நான் நம்புகிறேன். பிரம்ம புத்திரா நதிக்கரையில் வசித்து வந்த நான் அங்கிருந்த சில மந்திர வாதிகளின் செயல்களினால் அந்த இடத்தை விட்டு இங்கே வந்து விட்டேன். உன்னுடைய குரு மிகுந்த சக்தி வாய்ந்தவர் என்பதால் உன்னுடன் சேர்ந்து கொண்டு உன் குருவை சந்தித்து அவருடைய உதவியுடன் அந்த மந்திரவாதிகளை நாசமாக்குவேன்'' என்றான்.

உடனே மந்திரவாதி, ''உக்கிர தண்டா! கூடிய சீக்கிரமே, உன்னை என்னுடன் கரடிபாத மலைக்கு அழைத்துச் செல்வேன். ஆனால் அதற்கு முன் மாயக்குரங்கிடமிருந்து என் மந்திரக்கோலை நான் கைப்பற்ற



வேண்டும். அந்த ஜிதகேதுவுக்கு ஏதாவது தண்டனை அளிக்க வேண்டும்'' என்றான்.

உடனே உற்சாகத்துடன் உக்கிர தண்டன் தயாராக, அனைவரும் குரங்கையும், ஜீவகுப்தனையும் பின்தொடர ஆரம்பித்தனர்.

இதற்குள் மாயக்குரங்கு வெகு விரைவாக குதிரையின் மீது சவாரி செய்து சந்திரசீல நகரை அடைந்து விட்டது. நகரத்தின் நுழைவாயிலில் இருந்த காவலர்கள் குரங்கைக் கண்டு வியப்படைந்தனர். அவர்களுள் ஒருவன், ''குரங்கால் குதிரை சவாரி செய்ய முடியுமா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டவன் தொடர்ந்து, ''குரங்கே! உன்னால் மனிதனைப் போல் பேசவும் முடியுமா?'' என்று கேட்டுக் கொண்டே குரங்கின் வாலினைப் பிடித்துக் கொண்டான்.

கோபமடைந்த மாயக்குரங்கு, ''முட்டாள்! என்னை விடு. நான் சாதாரணக் குரங்கு இல்லை. நான் மாயக்குரங்கு. ராஜாவை ஒரு பெரிய ஆபத்திலிருந்து நான் காப்பாற்ற வேண்டும்'' என்று திமிறியது. இவ்வாறு குரங்கு பேசியதைக் கேட்ட மற்றொருவன், ''நீ யாராயிருந்தாலும் சரி. என்னுடன் வா. ராஜாவைப் பார்க்கலாம்'' என்று கூறி தன் வாளை குரங்கின் முகத்திற்கு நேராக நீட்டினான். உடனே குரங்கு தன் மந்திரக் கோலினால் அந்த வாளைத் தொட, வாள் எரிந்து சாம்பலாயிற்று. அதைக்கண்டு காவலர்கள் பிரமித்துப் போய் நிற்கையில், குரங்கு அவர்களிடமிருந்து தப்பியோட அரண்மனையை நோக்கிச் சென்றது. செல்லும் வழியில் நகரக்காவலர் தலைவன் வந்து கொண்டிருந்தான். குதிரையில் பாய்ந்து செல்லும் குரங்கைக் கண்டதும் அவன் தன் வாளை உருவிக் கொண்டு ''யாரோ ஒரு ஒற்றன் நம் ராஜ்யத்தில் நுழைந்து விட்டான். இந்த குரங்கு வேடமணிந்த ஒற்றனைப் பிடியுங்கள்'' என்று கத்திக் கொண்டே மற்ற காவலர்களுடன் குரங்கைத் துரத்தினான்.

அரண்மனைக்கு அருகிலுள்ள சாலையில் அந்த சமயம் ஒரு குரங்காட்டி தன் குரங்குகளுடனும், கரடியுடனும் வித்தை காட்டிக் கொண்டிருந்தான். குதிரை சவாரி செய்துவரும் குரைங்கினைக் கண்டதும் குரங்காட்டிக்கு குதூகலம் உண்டாயிற்று. ''ஆகா! இப்படி ஒரு அதிசயக் குரங்கை நான் பார்த்ததே

இல்லை. அனுமாரைப் போல் தோன்றும் இந்த அதிசயக் குரங்கை நான் பிடித்து வைத்துக் கொண்டால், இதை வைத்துக் கொண்டு நிறைய வித்தைகள் காண்பிக்கலாம். மக்கள் மிகவும் ர சித்துப் ப ார்ப்பார்கள். எனக்கு நிறைய வருமானம் கிடைக்கும்'' என்று கற்பனை செய்ய ஆரம்பித்தான். அ தைப் பி டிக்கும் எண்ணத்துடன் தன் கை வசமிருந்த ஒரு சு ருக்குக் க யிற்றை அ தன் மீது குரங்காட்டி வீசினான். சுருக்கில் மாட்டிக் கொண்ட மாயக் குரங்கு குதிரையிலிருந்து கீழே 'தொப்' பென்று விழுந்தது. அதனுடைய கையிலிருந்த மந்திரக்கோல் எகிறி தூரத்தில் எங்கேப் போய் விழுந்தது. குரங்காட்டி ஆரவாரம் செய்து கொண்டு குரங்கை 'கப்' என்று பிடித்துக் கொண்டான்.

குரங்காட்டியிடம் பிடிபட்ட மாயக்குரங்கு கோபத்தில் குரங் காட்டியை நோக்கி, ''டேய் முட்டாள்! நான் ஒன்றும் சாதாரணக் கு ரங்கு இல்லை. மாயக்குரங்கு! ஜிதகேது ராஜாவை அபாயம் சூழ்ந்திருக்கிறது. அதைப்பற்றி எச்சரிக்கவே நான் இங்கு வந்திருக்கிறேன். என்னை நீ இவ்வாறு அவமானப்படுத்துவதன் மூலம் பெரும் தவறு இழைக்கிறாய். நான் நினைத்தால் உன் தலையை சீவி விடுவேன். என்னுடைய மந்திரக் கோல் எ ங்கே? '' எ ன்று வீ றிட்டு கத்தியது.

அதைக்கேட்ட குரங்காட்டிக்கு கொஞ்சம் பயம் ஏற்பட்டது.



குரங்குக்கு ஏதோ பேய் பிடித்திருக் கிறது என்று நினைத்தான். இந்த குரங்கை அடக்க தன்னுடைய கரடியைப் பயன்படுத்த எண்ணி, தன்னுடைய வளர்ப்பு கரடியிடம், ''இந்தக் குரங்கை ஏதோ பிசாசு பிடித்து ஆட்டுகிறது. உ ன்னால்தான் இதை சாமாளிக்க முடியும்'' என்று கூறி கரடியை குரங்கின் மீது ஏவி விட்டான். உடனே கரடி குரங்கின் மீது பாய்ந்து அதை தரையோடு அழுத்தியது. வீறிட்டு அலறிய குரங்கு ''முட்டாளே! என்னை விட்டு விடச் சொல். நான் ராஜாவை ஆபத்தில் இருந்து காக்க வந்திருக்கிறேன். என்னை வீணாக தொந்தரவு செய்யாதே'' என்று கூவியது.

ஆனால் அங்கு வேடிக்கை பார்த்தவர்கள் குரங்கின் வார்த்தை களைப் பொருட்படுத்தவில்லை. குரங்கும் கரடியும் வீராவேசத்துடன்

சண்டையிடுவதை வேடிக்கை பார்க்க ஆரம்பித்தனர். இதற்குள் குரங்கைத் துரத்திக் கொண்டு வந்த காவலர் தலைவன் அந்த இடத்திற்கு வந்தான். அங்கு நடக்கும் அமர்க்களத்தை நிறுத்தச் சொல்லிவிட்டு, குரங் காட்டியை நோக்கி, ''இந்தக் குரங்கு ஒரு ஒற்றன். இவனை பத்திரமாக கைது செய்து நம் ராஜாவிடம் ஒப்படைக்க வேண்டும்'' என்று எச்சரிக்கை விடுத்ததும், குரங்காட்டி கரடியைப் பிடித்து ஒதுக்கி விட்டான்.

ஒருவாறு சமாளித்துக் கொண்டு எழுந்த மாயக்குரங்கு ''நான் மீண்டும் மீண்டும் உங் கள் அ னைவரையும் எச்சரிக்கிறேன். நமது ராஜாவை அபாயம் சூ ழ்ந்திருக்கிறது. ஒ ரு பலசாலியான ராட்சசனும், ஒரு மந்திரவாதியும் சேர்ந்து நம் ராஜாவை கொல்வதற்காக இங்கே வந்து கொண்டிருக்கின்றனர். அதைப்பற்றி எச்சரிக்கவே நான் இங்கு வந்திருக்கி றேன். என்னை சாதாரணக் குரங்கு என்று நினைத்து அவமானப் படுத்து கிறீர்கள். நான் ஒரு மந்திரவாதியின் சீடன். அது எங்கே இப்போது? சரிசரி, உங்கள் ராஜாவை இங்கே அழைத்து வாருங்கள்'' என்றது.

''என்ன திமிர் உனக்கு? எங்கள் ராஜா உன்னைத் தேடி வர வேண்டுமா? பேசாமல் என்னுடன் வா. உன்னை எங்கள் ராஜாவிடம் அழைத்துச் செல்கிறேன்'' என்று சினந்த காவலர் தலைவன், பிறகு குரங்காட்டியைப் பார்த்து ''உன்னுடைய கரடியின் உதவியுடன் இதைப் பிடித்துக் கட்டு. இதை இ ழுத்துச் செ சல்வோம்'' என்றான். காவலர் தலைவன் கட்டளைப்படி குரங்கு ராஜாவிடம் அழைத்துச் செல்லப்பட்டது.

சற்று நேரம் அலறிய குரங்கு ''சரி, நீங்கள் கூறியவாறே என்னை உங்கள் ராஜாவிடம் அழைத்துச் செல்லுங்கள். எப்படியும் அவரைப் பார்க்கத்தானே நான் இங்கு வந்திருக்கிறேன்! ராஜாவை ஆபத்திலிருந்து காப்பாற்ற என் மந்திரக் கோல் மட்டுமிருந்தால் போதும். ஆனால் என் மந்திரக் கோலை காணவில்லையே!'' என்று புலம்பிக் கொண்டே சென்றது.

(தொடரும்)





நவீன வேதாளக் கதை

# தர்மதாசின் சக்திகள்

தன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் சிரித்துக் கொண்டே ''மன்னா, உன்னுடைய லட்சியத்தை அடைய நீ எடுத்துக் கொள்ளும் முயற்சிகளை நான் பாராட்டுகிறேன். ஆனால் உன்னுடைய கடும் முயற்சிகளால் உனக்கு இது வரை ஏதாவது பலன் கிடைத்துள்ளதா என்று யோசித்துப் பார். நீ வீணாக ஏன் இவ்வாறு சிரமப்படுகிறாய்? உன்னைப் பார்த்தால் எனக்கு தர்மதாசின் கதை ஞாபகம் வருகிறது.



அவனுடைய கதையைக் கூறுகிறேன் கேள்'' என்றது.

ஸ்ரீ சைலம் என்ற ஊரில் வீரதாஸ் தனது புதல்வர்களான தர்மதாஸ், ராம்தாஸ், கிருஷ்ணதாஸ் ஆகியோருடன் வசித்து வந்தான். மூத்தவனான தர்மதாஸ் தனது தந்தையின் தொழிலான விவசாயத்தைச் செய்ய விரும்பவில்லை. குருகுலத்தில் சேர்ந்து க ல்வி ப யில வி ரும்பிய அவனுடைய ஆசையை, வீரதாஸ் ஒப்புக் கொள்ள மறுத்துவிட்டார். அதனால் கோபமடைந்த தர்மதாஸ் வீட்டைவிட்டு வெளியேறி வெளியூர் சென்று வி ட்டான். அ வனுடைய மற்ற இரு புதல்வர்களும் தந்தையுடனே வசித்து வந்தனர்.

சில ஆண்டுகளுக்குப் பின், ஒரு கொடிய நோயினால் பீடிக்கப்பட்ட வீரதாஸ் பேசும் சக்தியை அறவே இழந்தான். மருத்துவ சிகிச்சைக்காக ஏராளமாகப் பணம் செலவழித்து அவனுடைய குடும்பம் கடனில் மூழ்கி மிகவும் சிரமப்பட்டது. கடனை அடைப்பதற்காக நிலம், நீச்சு, வீடு அனைத்தையும் விற்க வேண்டி வந்தது.

மூத்தவனான தர்மதாஸ் சர்வஸ்ரேயர் என்ற மிகப் புகழ்பெற்ற குருவிடம் கல்வி பயில அமர்ந்து, சகல சாஸ்திரங்களையும் கற்று, குருவிடமிருந்து பல அபூர்வ சக்திகளையும் பெற்று விட்டான். அவ்வாறு தான் பெற்ற சக்தியினால், தன் குடும்பத்தின் சங்கடமான நிலைமையை உணர்ந்து கொண்ட தர்மதாஸ் தனது குருவிடம் அனைத்தையும் கூறினான்.

''உன்னுடைய படிப்பு முடிந்து போய் விட்டது. பல அபூர்வ சக்திகளை என்னிடமிருந்து நீ அடைந்திருக்கிறாய். அவற்றைப் பயன்படுத்தி மற்றவர்களுக்கு உதவிகளைச் செய்வாய். ஆனால் நீ கற்ற வித்தைகள் உனது தாய் அவற்றைப் பயன்படுத்த அனுமதி கொடுத்தால் மட்டுமே, உன்னால் பிரயோகிக்க முடியும். தாயின் சம்மதத்துடன்தான் நீ உன் வீட்டை விட்டு, ஊரைவிட்டு வெளியேற முடியும். உன்னுடைய சக்திகள் யாவற்றையும் உன் சகோதரர்களில் ஒருவனுக்கு நீ அளிக்காதவரை உன்னால் அவர்களை விட முடியாது'' என்று குரு அவனை ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார்.

ஸ்ரீசைலம் சென்று அடைந்த தர்மதாஸ், தனது தாய் தந்தைக்கு



ஆறுதல் கூறினான். இளைய சகோதரன் ராமதாசுக்கு விவசாயத்தைப் பற்றி விரிவாகக் கற்றுக் கொடுத்து விவசாயத்தில் ஈடுபடுத்தினான். கடைசி சகோதரன் கிருஷ்ண தாசுக்கு வியாபார நுணுக்கங்களைக் கற்றுக் கொடுத்து, ஒரு கடை வைத்து வியாபாரம் செய்ய உதவி செய்தான். அந்த ஆண்டு, ராமதாஸ் வயலில் அமோக விளைச்சல் உண்டானது. கிருஷ்ணதாஸ் வியாபாரத்தில் நல்ல லாபம் அடைந்தான். அவர்களுடைய குடும்பத்தின் பொருளாதார நிலை பெரிய முன்னேற்றத்தைக் கண்டது. ஊர்க்காரர்கள் அனைவரும் தர்ம தாசின் அரிய சக்தி உள்ளன என்று பேசிக் கொண்டனர்.

ஒருநாள் அவனுடைய தாய் அவனிடம் ''மகனே! நீ வீட்டை விட்டுச் சென்று அரிய சக்திகளைப் பெற்றிருக்கிறாய் அதை வைத்து உன்னுடைய தந்தை இழந்த பேசும் சக்தியை மீண்டும் பெறச் செய்ய வேண்டும்'' என்றாள். ''அம்மா, தந்தையை மீண்டும் பேச வைக்க, மின்மினித் தீவில் உள்ள துளசி தேவை. ஆனால் என் குருவின் கட்டளைப்படி நான் நமது ஊரை விட்டு ஒருமுறை வெளியேறினால், மீண்டும் திரும்பி வர முடியாது. ஆகவே என் தம்பி கிருஷ்ணதாஸ் என்னுடன் வரட்டும். செல்லும் வழியிலேயே என்னுடைய அபூர்வ சக்திகளை அவனுக்கு உணர்த்து வேன். அவனிடமே அந்த துளசியின் வேரைக் கொடுத்தனுப்புவேன்'' என்றான்.

அதைக் கேட்ட அவன் தாய் ''அப்படியா! மிகவும் மகிழ்ச்சி! கிருஷ்ணனை உன் கூட அழைத்துச் செல். தாயின் அன்பைவிட குருவின் கட்டளை பெரிதல்ல'' என்றாள்.

பிறகு தர்மதாசும் கிருஷ்ணதாசும் துளசியைத் தேடிப் புறப்பட்டனர். கிருஷ்ணன் தன் அண்ணனிடம், ''அண்ணா? உன்னிடம் அபூர்வ சக்திகள் இருக்கிறது. ஏதாவது செய்து அவற்றை எனக்கும் கொடு'' என்றான்.

அதற்கு தர்மதாஸ். ''மின்மினி தீவிற்குப் போவதற்குள் உனக்கு என் சக்திகள் மீது நம்பிக்கை இருந்தால், அவை தானே உன்னை வந்து அடையும்'' என்று சொன்னான்.

இதற்குள் அங்கு ஒரு மாட்டு வண்டி வந்தது. வண்டிக்காரன் கருப்பன் தெரிந்தவன் ஆதலால்



வண்டியை நிறுத்தினான். ''தம்பி மூலிகையை எடுத்து வருவதற்கு நீ நடந்து தான் வரவேண்டும்'' என்று கூறி தர்மதாஸ், வண்டியில் ஏறிச் சென்று விட்டான்.

நண்பகல் நேரம் வரை நடந்த கிருஷ்ணனுக்கு, திடீரென ஒரு மரத்தின் கீழ் தர்மதாஸ் அமர்ந் திருந்தது தென்பட்டது. களைத்துப் போன கிருஷ்ணதாசுக்கு மிகவும் பசித்தது. அப்போது அவர்கள் ஊரைச் சேர்ந்த பாபு அங்கே வந்து எனக்கு மிகவும் பசிக்கிறது வாருங்கள். நாம் சேர்ந்து உண்ணலாம்'' என்று அழைத் தான். அப்போது தர்மதாஸ், ''தம்பி, துளசியைக் கொண்டு வரப் போகிறான் அதனால் அவன் உணவு உண்ணக் கூ டாது. ந ான் ம ட்டும் உண்ணுகிறேன்'' என்று பாபுவுடன் சேர்ந்து உண்டான்.

பாபு விடைபெற்றுச் சென்றதும், தர்மதாஸ் ''தம்பி, நான் உறங்கப் போகிறேன். தந்தைக்காக துளசி கொண்டு வரப்போகும் நீ உறங்கக் கூடாது. நீ விழித்திருப்பாய்'' என்று சொல்லி தான் உறங்கி விட்டான்.

மறுநாள் இருவரும் எழுந்து சிறிது தூரம் சென்றதும் ஒரு பெரிய ஆறு குறுக்கிட்டது. ''தம்பி அதோ பார்! அதுதான் மின்மினித் தீவு. அங்கே தான் நாம் தேடும் துளசி உள்ளது,'' என்று தர்மதாஸ் அறிவித்தான். அப்போது படகுக்கார சோமன் அவர்களிடம் வந்து, ''நான் மின் மினித் தீவுக்கு போகிறேன். இருவரும் வேண்டுமானால் வரலாம்'' என்றான்.

தர்மதாஸ் தன் தம்பியிடம், ''அப்பாவின் பெயரைச் சொல்லி நீ ஆற்றில் குதித்து நீந்திச்செல். நான் உனக்காக அங்கு காத்திருக்கிறேன்'' என்றான்.

தன் அண்ணனின் வார்த்தைக்கு மறுப்பு ஏதும் சொல்லாமல் கிருஷ்ண தாசும் ஆற்றில் குதித்து நீந்திச் சென்றான். மின்மினித் தீவை அடைந்தவுடன், அவனுக்கு முன் பாகவே தர்மதாஸ் அங்கே இருந்தான். ஆனால் நீந்தி வந்ததால் கிருஷ்ணதாஸ் மிகவும் களைத்துப் போய் இருந்தான்.

கிருஷ்ணதாசின் களைப்பு தீர்ந்ததும் இருவரும் துளசி செடியைத் தேடிச் சென்றனர். சற்று தூரம் சென்றதும் ஒரு இடத்தில் அவர்கள் கிராமத்தைச் சேர்ந்த கோபி செடிக்காக மண்ணைத் தோண்டிக் கொண்டு இருப்பதைக் கண்டனர். அவர்கள் அங்கு வந்திருக்கும் நோக்கத்தை

அறிந்ததும் கடப்பாரையை அ வர் களிடம் கொடுத்தான்.

கிருஷ்ணதாஸ் அதை வாங்க முயலுகையில், ''துளசி போன்ற புனிதமான செடியை கைகளினால் தான் பிடுங்க வேண்டும்'' என்று தர்மதாஸ் கூறினான். சற்று தொலைவு நடந்ததும் துளசி செடிகள் தென் பட்டன. கைகள் வலித்தாலும் கிருஷ்ணதாஸ் தன் கைகளாலேயே அந்த செடியைப் பிடுங்கினான்.

அண்ணன் தன் தம்பியை பாராட்டியவாறு, ''தந்தை மீதுள்ள பக்தி மி கவும் பு னிதமானது. என்னிடம் சக்தி இருந்தால் இந்த நிமிடத்திலிருந்து அதில் பாதி உன்னுடையது. இனி நீ காற்றில் மிதந்து வீடு செல்லலாம்'' என்றான். கிருஷ்ணன் பறக்க முயன்றான். ஆனால் முடியவில்லை.

''தம்பி. உ ன்னை எ ன் ச க்திகள் வந்து அடையவில்லை என்று தோன்றுகிறது. சரி, நீ வீட்டுக்கு நடந்து செல். நான் என் வழியே செல்கிறேன்'' என்று கூறி தர்மதாஸ் அவனை விட்டுச் சென்று விட்டான்.

நடந்து சென்று வீட்டை அடைந்த கிருஷ்ணன், துளசியின் வேரினால் தன் தந்தையின் பேசும் சக்தியை மீளச் செய்தான். துளசிச் செடியை தான் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டு வந்ததை தன் பெற்றோரிடம் பாபு, சோமன் மற்றும் கோபி சொன்னால் நன்றாக இ ருக்கும் எ ன நி னைத்து மறுநாள் மூவரையும் அழைத்து வந்தான். முதலில் சோமன் வீரதாசிடம், ''உங்கள் மூத்த மகன்



சாதாரண ம னிதன் அ ல்ல. அ வன் காற்றில் மிதப்பதை என் இரு கண்களால் பார்த்தேன்'' என்றான்.

இதைக் கேட்டதும் கிருஷ்ண தாசிற்கு வியப்பாக இருந்தது. இதற்குள் பாபு, எனது உணவுப் பொட்டத்தில் பழைய சோறு மட்டுமே இருந்தது ஆனால் அதை அவிழ்த்ததும் அதில் சுவையான உணவுப் பண்டங்கள் இருந்தது என்று கூறினான். கிருஷ்ணன் ஆற்றில் நீந்திச் செல்கையில் தர்மதாஸ் படகில் செல்லாமல் ஆற்றின் நீர் மீது கால் வைத்து நடந்து போனதைத் தான் கண்டதாகவும், ஒரு பெரிய தவயோகி யால் தான் இவ்வாறு செய்ய முடியும் என்றும் சோமன் கூறினான். அப்படிப்பட்ட அபூர்வசக்திகள் தன் அண்ணனுக்கு இருந்ததாக அவர்கள் கூற தனக்கு மட்டும் அவை ஏன்

புலப்படவில்லை என்று கிருஷ்ண தாஸ் வியந்தான். இதெல்லாம் தன்னிடம் உள்ள கர்வத்தினால் தான் என்று கிஷ்ணதாசுக்குத் தெரிந்தது. அவ்வாறு எண்ணத்தொ டங்கிய உடனேயே, அவனிடம் சில அபூர்வ சக்திகள் தோன்றின.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம், ''மன் னா! மற்றவர்களுக்குத் தெரிந்த தர்மதாசின் அபூர்வசக்திகள் கிருஷ்ணனுக்கு ஏன் புலப்படாமல் போயின? தர்மதாஸ் தனது வாக்குறுதியின் படி தனது அபூர்வசக்திகளைத் தன் தம்பிக்கு ஏன் செல்லும் வழியிலே அளிக்க வில்லை? அவன் தாய் அவனை மீண்டும் வீட்டுக்கு வரச் சொல்லி அழைத்தும், குருவின் கட்டளையை விட தாயின் அன்பு பெரிது என்று வலியுறுத்தியும் தர்மதாஸ் ஏன் வீடு திரும்பவில்லை? இவற்றுக்கு பதில் தெரிந்தும் கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது.

அதற்கு விக்கிரமன் ''தர்மதாஸ் தன் தம்பிக்கு தன்னுடைய சக்தியை கொடுக்க எண்ணினான் ஆனால் கிருஷ்ணதாசுக்கு தன் அண்ணனின் சக்திகள் மீது பூரண நம்பிக்கை இல்லை. துளசி செடியை எடுத்து வர தர்மதாசன் கிருஷ்ணதாசனை தேர்ந் தெடுத்தவுடன் அவன் மனதில் கர்வம் குடி கொண்டுவிட்டது. அதனால் தான் அவனால் தன் அண்ணனின் சக்தியை உணர முடியவில்லை. அவ்வாறு பூரண நம்பிக்கை இல்லா தவன் தன் சக்திகளைப் பெறுவதில், தர்மதாசுக்கும் விருப்பம் இல்லை.

எந்தத் தாயும் தன் பிள்ளை தன்னை விட்டுப் போக விரும்ப மாட்டான். அதுதான் பெற்றபாசம் ஆனால் தர்மதாஸ் வீட்டுப் பொறுப்பை முடித்தபின் உ லக ந ன்மைக்காக கிளம்பிச் சென்றான். தாயின் எண்ணத்தை நிறைவேற்றாததை பெருங்குற்றமாக எண்ணக் கூடாது. ஏனெனில் அவனது எண்ணம் உயர்வானது என்றான்.

விக்கிரமனது சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே, வேதாளம் தன்னை சுமந்து வந்த உடலுடன் மீண்டும் பறந்து சென்று முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.






## அடிமைகளும் ஆட்சி புரிந்தனர்



இந்தியாவை ஆண்ட முகமதிய மன்னர்களில் புகழ் பெற்ற முகமதிய மன்னர் ஒருவரின் அடிமையும் அவர் வம்சத்தினரும் கூட இந்தியாவில் தொடர்ந்து 300 ஆண்டுகள் ஆட்சி புரிந்துள்ளனர். கி.பி.1192ஆம் ஆண்டில், ஆப்கானிஸ்தானைச் சேர்ந்த கோரி முகம்மது இந்தியாவின் மீது படையெடுத்து பஞ்சாபைக் கைப்பற்றினார். ஆனால் தன் நாடான ஆப்கானிஸ்தானுக்குத் திரும்பிச் செல்கையில் தன் அடிமையான குத்புதீன் அய்பெக்கை வைஸ்ராயாக பஞ்சாபை ஆட்சி செய்ய நியமித்தார். பல வருடங்கள் ஆட்சி புரிந்த இவர் தில்லியிலுள்ள குதுபினாரையும் கட்டினார்.

## உருத்திராட்ச மாலை



முனிவர்களும் யோகிகளும் உருத்திராட்ச மாலையின் மகிமையை உணர்ந்திருந்தனர். செம்பழுப்பு நிறத்தில் இருக்கும் உருத்தி ராட்சக் கொட்டைகளின் மருத்துவ குணத் தையும், ஆன்மீகச் சிறப்பினையும் அன்றே அறிந்திருந்த யோகிகள், அவற்றை ஒரு மாலை யாகக் கழுத்தில் அணிந்து வந்தனர். ஒவ்வொரு கொட்டையிலும் ஒன்று முதல் பல முகங்கள் உண்டு. ஐந்து முகங்கள் கொண்ட உருத்திராட்சக் கொட்டைகள் உள்ள மாலையை பொதுவாக எங்கும் காணலாம். 21 முகங்கள் கொண்டவை காண்பதற்கு அரிது. மூன்று முக உருத்திராட்ச மாலை உடல் நலத்தையும், நான்கு முக மாலை கல்வியையும் ஒருமுக மாலை அதிர்ஷ்டத்தையும் தருவதாக நம்பிக்கை நிலவுகிறது.

அயல் நாட்டுக் கதைகள் (மலேசியா)

# இயற்கையின் ஆதரவு

அங்காசா என்ற ஏழைச் சிறுவன் பரியுடன் காட்டுக்குள் அங்கும் இங்கும் திரிந்து கொண்டிருக்கையில் சுவையான பழம் கொண்ட ஒரு மரம் அவன் கண்களில் பட்டது. பழம் மிக உயரத்தில் இருந்தது. மரமோ மிக மெல்லியதாக இருந்தது. ஆகவே அவன் மரத்தை வளைத்து, பழத்தைப் பறிக்க முயன்றான். அப்போது வானிலிருந்து ஒரு குரல், பழத்தைப் பறிக்க முயல வேண்டாம் என்றும், மரத்தின் அடியில் தோண்டினால் புதையல் கிடைக்கும் என்றும் அறிவித்தது. அங்காசா அவ்வா று செய்ததும் அவனுக்கு ஒரு தங்கக் கட்டி கிடைத்தது. அதை எடுத்துக் கொண்டு கடைக்குப் போய் ஒரு மாட்டு வண்டியை வாங்கி அதில் உணவுப் பொருட்களை நிரப்பிக் கொண்டு தன் குடிசைக்குத் திரும்பினான்.



அடுத்தநாள், அத்தங்கத்தை விற்ற பணத்தைக் கொண்டு காட்டுக்கு அருகிலேயே ஒரு பெரிய மாளிகை கட்டினான். கிராமத்து மக்கள் பலருக்கும் இருப்பிட வசதிகள் செய்து அவர்களை அங்கே குடியேறச் செய்தான்.

விரைவிலேயே அங்காசா மணம் புரிந்து கொண்டான். அவனுக்கு ஒரு அழகான பிள்ளையும், பெண்ணும் பிறந்தனர். நாட்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் கழிந்து கொண்டிருந்தன. அவன் மீது பொறாமை கொண்ட அண்டை நாட்டு மன்னன் அவன் மாளிகையைத் தான் கைப்பற்றலாம் என்று எண்ணி தனது இரண்டு உளவாளிகளை அங்காசாவிடம் ஒரு திட்டத்துடன் அனுப்பி வைத்தான்.

அந்த இரு உளவாளிகளும் அங்காசாவின் குதிரையைத் திருடி

காட்டில் ஒளித்து வைத்தனர். அதன் பின் இருவரும் சோதிடர்களைப் போல் நடித்து அங்காசாவிடம் சென்று சோதிடம் பார்ப்பது போல் பாசாங்கு செய்து குதிரையைக் கண்டு பிடித்துக் கொடுத்தனர்.

உடனே அவர்களை நம்பி தன் குடும்பத்தினரின், குறிப்பாக தன் மகன் கர்மா தன் மகள் புஷ்பா ஆகியோரது எதிர்காலத்தைப் பற்றி அறிய சோதிடம் பார்க்கச் சொன்னான். அவர்கள் சோதிடம் கணிப்பது போல் பாசாங்கு செய்து விட்டு, ரகசியமாக அங்காசாவிடம் அவன் மகனாலும் மகளாலும் அவனுக்கும் பொது மக்களுக்கும் அழிவு ஏற்படும் என்றும் ஆகையால் இருவரையும் கண்காணாத இடத்தில் விட்டு விட வேண்டும் என்று அறிவுரை புகன்றனர். அதன்படியே இரவு அவர்கள் உறங்கும் போது அங்காசா அவர்களை ரகசியமாக ஒரு ரதத்தில் ஏற்றி காட்டின் எல்லையில், விட்டு விட ஏற்பாடு செய்தான்.

மறுநாள் காலை, தூக்கத்திலிருந்து எழுந்து கண்திறந்து பார்த்த கர்மாவுக்கும் புஷ்பாவுக்கும் தாங்கள் எப்படி மாளிகையை விட்டு எவ்வாறு காட்டுக்குள் வந்தோம் என்று புரிய வில்லை. சுற்றிலும் அவர்கள் கண்ட இயற்கை காட்சிகள் அவர்களை பிரமிக்க வைத்தன. இவற்றை எல்லாம் கண்டு களிப்பதற்காகத் தன் பெற்றோர்கள் தங்களை இங்கே அனுப்பி வைத்துள்ளனர் என்று எண்ணிக் கொண்டனர். ஆனால்



மாலை மங்கி இரவு நேரம் வந்தும் அழைத்துச் செல்ல யாரும் வர வில்லை என்றதும் இருவரும் சற்றே குழப்பத்தில் ஆழ்ந்தனர்.

இரவின் நிலவொளியில் அவர்களுக்கு ஒரு பழைய மாளிகை தென் பட்டது. 'அடடா, இதுவரை இது நம் கண்ணில் பட வில்லையே!' என்று எண்ணிக் கொண்டே அந்த மாளிகையை அடைந்தனர். அப்போது அவர்களை உள்ளே வரும்படி ஒரு குரல் அழைத்தது. உள்ளே சென்றதும் தங்களுக்காக உணவும் படுத்துறங்க கட்டிலும் தயாராக இருந்ததைக் கண்டு வியந்தனர். 'இவற்றை யார் நமக்காக தந்திருக்கிறார்கள்?' என்று யோசிக்கும்போது ''நான்தான் இயற்கை அன்னை. உங்களுக்காக இவற்றை அளித்திருக்கிறேன். நீங்கள்



கோபங் கொண்ட தலைவன் தன் கத்தியை உருவினான். கண் இமைக்கும் நேரத்தில் எங்கிருந்தோ ஒரு பெரிய சிங்கம் உறுமிக் கொண்டே அவர்கள் மீது பாய்ந்து, தலைவனை வாயால் கவ்விக் கொண்டு சென்று விட்டது. மற்றவர்கள் ஓடி விட்டனர்.

மறுபடியும் அங்கே அமைதி நிலவியது. தங்களைக் காத்தது இயற்கை அன்னைதான் என்று இருவருக்கும் தெரிந்தது. இருவரும் பிறகு கடற்கரைக்குச் சென்றனர். அப்போது கடலில் ஒரு கப்பல் நின்று கொண்டிருந்தது. கர்மா கப்பல் தலைவனை அணுகி, ''எங்களை எங்கள் பெற்றோரிடம் கொண்டு விட முடியுமா?'' என்று வேண்டினான். ''சரி, வாருங்கள்'' என்று தலைவன் சொல்ல, இருவரும் மகிழ்ச்சியுடன் கப்பலில் ஏறி அமர்ந்தனர். ஆனால் கப்பல் புறப் பட்டு சற்று நேரம் ஆனதும் தலைவன் அவர்களிடம் வந்து புஷ்பாவை தான் திருமணம் செய்து கொள்ளப் போவதாகவும் கர்மா அவனுக்கு அடிமையாக இருக்க வேண்டும் என்றும் கட்டளையிட்டான். ''இதற்கு புஷ்பா மறுத்ததும், கோபங் கொண்ட தலைவன் அவளைத் தூக்கிக் கடலில் எறிந்து விட்டான். அவள் கடலில் விழுந்ததும், எங்கிருந்தோ வந்த ஒரு சுறாமீன் புஷ்பாவை விழுங்கி விட்டது. அந்த

என்னுடைய மரங்களையும், மலர்களையும் நீரோடையையும் கடலையும் நேசித்தீர்கள். எனக்கு உங்களை மிகவும் பிடித்து விட்டது. உங்களுக்கு இப்போது என்ன வேண்டும், தங்கம் தரட்டுமா இல்லை என்னுடைய அன்பையும் ஆதரவையும் தரட்டுமா?'' என்று ஒரு குரல் கேட்டது.

''எங்களுக்கு உன்னுடைய அன்பும், பாசமும், ஆதரவும் தான் தேவை'' என்று இருவரும் ஒரே குரலில் கூறினர். ''சபாஷ், என் ஆதரவும் உதவியும் எப்போதும் உங்களுக்குக் கிடைக்கும்'' என்றது.

பிறகு இருவரும் உண்டு அந்த மாளிகையிலேயே உறங்கி விட்டனர். காலையில் அவர்களை சில கொள்ளைக்காரர்கள் சிறைப்பிடித்து வைத்திருந்தனர். அவர்களுடைய தலைவன் அதட்டும் குரலில் ''நீங்கள் எனது அடிமைகள்'' என்றான்.

''முடியாது, நீ சொல்வதைக் கேட்க மாட்டோம்'' என்று கர்மா முகத்தில் அடித்தாற்போல் பதில் சொன்னதும்,

சமயம் திடீரென ஒரு சூறாவளி வீச, கப்பல் கடலுள் கவிழ்ந்து அனைவரும் உயிரிழந்தனர். கர்மாவை மட்டும் சுறாமீன்கள் பத்திரமாக எடுத்துச் சென்று கரையில் விட்டன.

அவன் கண் திறந்த போது ஒரு கிழவியின் குடிசையில் இருந்தான். சிறிது நாட்களில் உடல் நலம் தேறியவுடன், கர்மா கிழவியுடனே வசிக்க ஆரம்பித்தான். தன் தங்கையை எண்ணியே வாழ்ந்து வந்தான். இவ்வாறு ஓர் ஆண்டு கழிந்தது.

ஒருநாள் அந்த ஊர் இளவரசனின் திருமண ஊர்வலத்தைக் காணச் சென்றான். ஊர்வலம் கர்மா நின்று கொண்டிருக்கும் இடத்தின் அருகே வந்ததும், கர்மாவைப் பார்த்த இளவரசி திடீரென ''அண்ணா!'' என்று அவனை நோக்கிக் கூக்குரலிட்டாள். என்ன அதிசயம்! எந்த புஷ்பாவை சுறாமீன் விழுங்கி விட்டது என்று நினைத்தானோ அதே புஷ்பாதான் இளவரசியாக ரதத்தில் வீற்றிருந்தாள். அண்ணனும் தங்கையும் ஒருவரை ஒருவர் சந்தித்து மட்டில்லா மகிழ்ச்சி அடைந்தனர். புஷ்பாவை விழுங்கிய சுறாமீன் அவளைக் கரைக்கு எடுத்துச் சென்று பத்திரமாக வெளியேற்றி விட்டதாகவும் அவளை இளவரசன் காப்பாற்றியதாகவும் பின்னர் இளவரசனும் புஷ்பாவும் கடந்த ஓர் ஆண்டாக கர்மாவைத் தேடிக் கொண்டிருப்பதாகவும் புஷ்பாவின் வாயிலாக கர்மா அறிந்து கொண்டான். இவ்வாறு சகல விபத்துகளிலின்றும் தங்களைக் காத்த இயற்கை அன்னைக்கு இருவரும் நன்றியைக் கூறி வணங்கினர். கர்மாவை இளவரசன் தனது ஆலோசகராக நியமித்துக் கொண்டான்.

பிறகு கர்மா தன் பெற்றோர்களைக் காண விரும்பி ஒரு படையுடன் தன் தாய்நாடு சென்றான். நயவஞ்சக மன்னன் தங்களது பெற்றோர்களைத் துன்புறுத்திக் கொண்டிருந்ததைக் கண்டு அவனுடன் மோதி அவனிடமிருந்து அரியணையையும் கைப்பற்றிக் கொண்டான்.

இவ்வாறு இயற்கை அன்னையின் ஆதரவுடன் பல அபாயங்களிலிருந்து மீண்ட கர்மாவும், புஷ்பாவும் தங்களுடைய குடும்பங்களுடன் இனிதே வாழ்ந்தனர்.



# செய்திச்சுடர்

## ஒவியத்திற்கு இந்த விலையா!



இந்தியாவின் மிகப் புகழ் பெற்ற ஓவியரான எம்.எஃப்.ஹுசேன் தற்போது ஒரு நூறு ஓவியங்களை வரைவதில் மும்முரமாயிருக்கிறார். இந்த நூறு ஓவியங்களை வரைவதற்காக அவர் பெற்றுக் கொண்ட தொகை என்ன தெரியுமா? மயக்கம் போட்டு விழுந்து விடாதீர்கள். 101 கோடி ரூபாய்கள். மும்பையில் வசிக்கும், ஸ்வரூப் ஸ்ரீவாஸ்தவா எனும் நபர் இத்தனை பணத்தை வாரி இறைத்து அவரிடமிருந்து ஓவியங்களை வாங்குகிறார். ஏற்றுமதி வியாபாரத்தில் ஈடுபட்டுள்ள ஸ்ரீவாஸ்தவா இவற்றை விற்றுப் பணமாக்கி நல்ல காரியங்களுக்காகப் பயன்படுத்தத் திட்டமிட்டுள்ளார்.

## தாஜ்மகாலுக்கு அபாயம்



தாஜ்மகாலைக் கட்டி முடித்து 350 ஆண்டுகள் நிறைவானதையொட்டி ஆண்டு முழுதும் விழா கொண்டாட இந்திய அரசு தீர்மானித்துள்ள வேளையில் அதிர்ச்சி தரும் தகவல் தெரிய வந்துள்ளது. தாஜ்மகாலின் பின்புறம் உள்ள இரு ஸ்தூபிகள் சாய ஆரம்பித்துள்ளன. இவ்வாறு சாய்வது புதிதல்ல என்றும், 50 ஆண்டுகளுக்கு முன்னரே இவை சாயத் தொடங்கி விட்டதாம். ராஜஸ்தான் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் இராமநாத், யமுனை நதியின் நீர் வற்றிப் போயிருப்பதே இதற்குக் காரணம் என்கிறார். யமுனையின் நீர் மட்டம் தான் இந்த ஸ்தூபிகள் நிலையாக இருக்கச் செய்தன என்று நம்பப்படுகிறது. தாஜ்மகால் கட்டும் சமயத்திலேயே, இந்த ஸ்தூபிகள் பிற்காலத்தில் பிரதான கட்டடத்தின் மேல் சாய்ந்து விடாமல் இருக்குமாறு கட்டப்பட்டனவாம்.

# THE ADVENTURES OF G-man





MIND RAIDER

PART 2

மனதைத் சிறைவைக்கும் கருவி

பாகம் - 2

வழங்குபவர்கள்








**இதுவரை நடந்த கதை :** குழந்தைகளின் எண்ணங்களை அபகரித்து அந்த சக்தியை டெர்ரோலின் இளமையாக இருக்கப் பயன்படுத்துகிறான் நியூரால். டெர்ரோலீன் இந்த அப்பாவிக் குழந்தைகளைக் கொண்டு ஜீ-மேனைத் தாக்குகிறான். ஜீ-மேன் குழந்தைகளைக் காப்பாத்துவானா? அல்லது குழந்தைகளுக்கு ஜீ-மேனால் தீங்கு ஏற்படுமா?











நியூராலோட
குழந்தைங்க
படைக்கு அப்பால
போகறதுக்கு ஏதாவது
வழி இருக்கணுமே.

எல்லாம்
போச்சு...
ஜீ-மேன்
ஓடறான்.

அடுத்த தாக்குதலைத் திட்டம்போட ஒரு அமைதியான இடத்தைக் கண்டுபிடிக்கிறான்.

நான் நல்லா
யோசனை
பண்ணனும் !
யோசனை
பண்ணனும் !

அதுதான்-
யோசனை !

நியூராலோட
சண்டை
போடணும்னா இந்த
இடத்திலேந்துதான்
செய்யணும்-
தலைலேந்து...




ஜீ-மேன் தன் மனதை மையப்படுத்தி மனவெளியில் நுழைகிறான். அங்கு எல்லா எண்ணங்களும் ஒன்று சேருகின்றன. அதை சிலர் ஒருமித்த உணர்வு என்று சொல்கின்றனர்.

நியூரால், போதும் இந்த மன விளையாட்டுகள். இந்த குழந்தைகள் போகட்டும்.

ஜீ-மேன் நீ ரொம்ப ஆச்சரியமானவன்பா...

ஆனா இங்கே, நியூரால்தான் ராஜா...

நியூரால் ஜீ-மேனின் மனதில் நுழைகிறான் மற்றும் ஒரு ஆயுதம் அவனுக்குத் தென்படுகிறது-குற்றம். ஒரு பதுங்குத் தாக்குதலில் தன் நண்பர்கள் எல்லோரும் உயிரிழப்பதை மேஜர் சூர்யராஜ் பார்த்திருக்கிறான். அப்போது தன் தண்பர்களுக்கு ஒரு உதவியும் செய்ய முடியாத நிலையில் இருந்தான் சூர்யாஜ். *

ஹூம்...
நீ உன் நண்பர்களுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்தாய் அந்த சண்டையில்.

அது பொய்...
நான் ஒன்றுமே செய்ய முடியாத நிலையில் இருந்தேன்.







* ஆசிரியர் குறிப்பு: ஜீ-மேனின் தோற்றத்தைப்பற்றி படிக்கவும்.

நீ ஒரு
கோழை நியூரால்.
டொர்ரோலீன் இல்லாமல் உன்னால்
சண்டை போட முடியாது.

நான்
உன்னோட
தான் சண்டை
போடறேன்...
இல்லையா ?

ஆமாம், ஆனா
அது டொர்ரோலீனுக்காக..
உனக்கு கொடுக்கற
உத்தரவுகளைச் செய்யறே.

அடிமை !

இல்லை !

ஜீ-மேன் நியூராலின் அகங்காரத்தைத் தாக்குகிறான்-
ஒரு மனிதனின் மிகப் பெரிய பலவீனம்.

உன்னை உபயோகிச்சு அவன் சிரஞ்சீவியாகப் பார்க்கிறான்...

அப்புறம் அவன் உன்னை உபயோகிக்கறத நீ அனுமதிக்கறே... ஏன்னா நீ ஒரு...

கோழை !

பொய். என் தலை மேல நீ ஏதாவது செய்யறத நான் பொறுக்க மாட்டேன்

ஜீ-மேன் வெற்றி பெறும் வாய்ப்பு இருக்கிறது. நியூரால் தளர்ந்து போகிறான்.



ஜீ-மேன் இதை தனக்கு சாதகமாக்கிக் கொள்கிறான்

அவமானம் இல்லையா உனக்கு ! அவன் உன்ன ஜெயிச்சுட்டான். உன் மானம், மரியாதை எல்லாம் போயிடுச்சு !

இப்ப நீ அவனோட ஒரு கைப்பொம்மை.

அஹ்... ஹ் !

இறுதியில் நியூரால் தோல்வி அடைகிறான்.

முடியாது!









மெஷீனின் மீதுள்ள நியூராலின் பிடியை அழித்துவிட்டு ஜீ-மேன் குழந்தைகளின் மனதை விடுவிக்கின்றான்.




தோல்வியினால் மனம் உடைந்த நியூரால் அங்கிருந்து ஓடுகிறான்.



இப்போது குழந்தைகள் தங்கள் பெற்றோர்களுடன் சேர்ந்து கொள்கின்றனர்.



ஆனா,
உங்க ரகசிய
அடையாளத்தோடு சமரசம்
செஞ்சிட்டீங்களே.
அது சரியா?

எனக்குத் தெரியும்,
நியூரால் என் மனவெளில
நுழைஞ்சு என் ரகசிய
எண்ணங்களை எல்லாம்
தெரிஞ்சுக்குவான்னு...

ஆனா இப்போ,
என் பழைய வாழ்க்கையப் பத்தி
அவனுக்குத் தெரிஞ்சாலும்,
அவன் மனசு ரொம்ப குழம்பி
போயிருக்கு. அவன்
ஞாபகசக்தி அடியோடு
அழிஞ்சிடுச்சு...

ஆமாம்...
ஆனா என்னிக்காவது
ஒரு நாள் இதெல்லாம்
அவன் ஞாபகத்துக்கு
வர்ற வாய்ப்பு
இருக்கே...

அதனாலதான்
அவன் திரும்பி
வர்றதுக்குள்ளே
அவனைக்
கண்டுபிடிச்சாகணும்.

இப்பவே அந்த
வேலைல
இறங்கிடுவோம்,
மேஜர்...

ப்ரைஜிக் கிரகத்தில் ஏதோ ஒரு இடத்தில்... நட்சத்திர மண்டலத்தில் 8 பில்லியன் ஒளி வருடங்களுக்கு அப்பால்...



PARLE

# Fun Center

**Cream Biscuits**



## CROSSWORD



**CLUES**

ACROSS
1. Michael Jordan's game
7. Cat's love it
8. Also called soccer
9. Andre Agassi's first love
10. Mahabaleshwar's fruit

DOWN
1. This ice cream flavour melts in your mouth
2. Have biscuits with this
3. It takes two hands to ____ the cream
4. Chocolate with sugar crumbs
5. Good on the road, great on ice
6. Aamir Khan won this race
10. Munch

Hint: All that's to do with Fun Center

## Interesting Facts

The world's highest cricket ground is in Chail, Himachal Pradesh.

The flea can jump 350 times its body length. It's like a human jumping the length of a football field.

Tennis was played at the Olympics until 1924, then reinstituted in 1988.

Cranberries are sorted for ripeness by bouncing them; a fully ripened cranberry can be dribbled like a basketball.

## Enhance your vocab

Words that should appear in the dictionary but don't

Aeroma: The odour emanating from an exercise room after an aerobics workout.

FunCenter: Anything yummy that gets even better when you reach the middle.

Choctasy: The joy of discovering a second layer of chocolate underneath the first.

Keyfruit: The one apple, pear or orange in the stand that, when removed, causes all others to tumble forward.

Phonesia: The affliction of dialing a phone number and forgetting whom you were calling just as they answer.

P-Spot: The area directly above the urinal in public washrooms that men stare at knowing a glance in any other direction would arouse suspicion.



Bourbon

Butterscotch

Milk

Strawberry




O&M 6996

visit us at www.parleproducts.com

*MRP inclusive of all taxes for net weight 100g.

ஹரியானா நாட்டுப்புறக் கதை

# திருடனை மாற்றிய புல்லாங்குழல் இசை

ஹீராலாலுக்கு பத்து வயது ஆகுமுன்பே அவன் பெற்றோர்கள் இறந்து விட்டனர். வயலில் வேலை செய்து கொண்டிருக்கையில் மின்னல் தாக்கி இருவரும் இறந்துவிட, ஹீராலால் அனாதையானான். அவர்களுடைய எஜமானரான ஜமீன்தார் ஹீராலால் மீது இரக்கப்பட்டு அவனைத் தன்னுடனே இருத்திக் கொண்டார். தனது வீட்டின் ஒரு மூலையில் அவனைத் தங்கச் செய்து உணவும் உடையும் கொடுத்து தன்னுடைய வீட்டு வேலைகளை அவனிடம் ஒப்படைத்தார். ஜமீன் தாரிணி அவனுக்கு மூன்று வேளை வயிறார உணவு கொடுத்தாலும், ஏராளமான வீட்டு வேலைகளையும் அவன் மீது சுமத்தினாள். ஆனால் அதை அவன் பொருட்படுத்தவில்லை. இரண்டு ஆண்டுகளிலேயே ஹீராலால் நல்ல வலிவு பெற்று திடகாத்திரமாகத் திகழ்ந்தான். அவன் உடல் வலிமையைக் கண்ட ஜமீன்தார் அவனைத் தனது வயல் வேலைக்குப் பயன்படுத்தத் தீர்மானித்தார். ஏற்கெனவே வயலில் வேலை பார்த்துக் கொண்டிருந்த இருவரில் ஒருவனை வேலையிலிருந்து நீக்கி விட்டு அந்த இடத்தில் ஹீராலாலை அமர்த்தினார்.

முன்பிருந்ததை விட, ஹீராலாலுக்கு வேலைப்பளு மிகவும் அதிகமாகி விட்டது. காலையிலிருந்து மாலை வரை இடைவிடாமல் உழைக்க நேரிட்டது.

வயலில் வேலை செய்து வந்த மற்றொருவன் சோம்பேறியாக இருந்தான். ஹீராலாலை நன்கு



வேலை செய்ய விட்டுவிட்டு, சமயம் கிடைக்கும் பொழுதெல்லாம் வெற்றிலை போட்டுக் கொண்டும் ஓய்வெடுத்துக் கொண்டும் இருந்தான். ஆனால் ஹீராலால் அவனைப் பற்றி ஜமீன்தாரிடம் புகார் செய்யவில்லை. சில ஆண்டு



களிலேயே அவனுக்கு ஜமீன்தாரிடம் வேலை செய்வதில் ஒரு சலிப்பு ஏற்பட்டது.

ஒருநாள் தன் துணிமணிகளைச் சுருட்டி எடுத்துக் கொண்டு, ஹீராலால் ஜமீன்தார் முன் சென்று நின்றான். வயலுக்கு வேலை செய்யப் போகும் நேரத்தில் இவன் எங்கே மூட்டை முடிச்சுகளுடன் தன் முன்னே நிற்கிறான் என்று எண்ணிய ஜமீ ன் தார். ''என்ன விஷயம்? '' என்று கேட்டார். ''பாபுஜி சென்ற ஐந்து ஆண்டுகளாக எனக்கு அடைக்கலம் கொடுத்து என்னை ஒரு ஆளாக் கினீர்கள். உங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நான் வெளியேசென்று பிழைத்துக் கொள்ள விரும்புகிறேன்'' என்றான். இவன் இப்படி திடீரெனக் கிளம்பிப் போய் விட்டால், வயல்வேலை பாதிக்கப் படுமே என்ற கவலையில் ''எங்கே போகப் போகிறாய்? '' என்று கேட்டார்.

''ஐயா, நான் காசிக்குப் போகலாம் என்று இருக்கிறேன். அந்தப் பெரிய நகரத்தில் எனக்கு ஏதாவது நல்ல வேலை கிடைத்துவிடும். எனக்கு விடை கொடுங்கள்'' என்றான் ஹீராலால். ''ஆனால் காசி இங் கிருந்து வெகு தொலைவில் உள்ளது. அங்கு நடந்து செல்லப் பல நாட்களாகும். வழிச்செலவுக்கு என்ன செய்வாய்?'' என்று ஜமீன்தார் கேட்டார். ''நான் ஐந்து ஆண்டுகளாகத் தங்களிடம் வேலை செய்திருக்கிறேன். அதற்கு இப்போது கூலி கொடுத்தீர்களானால் அதை வைத்துக் கொண்டு சமாளிப் பேன்'' என்றான் ஹீராலால்.

உள்ளே சென்ற ஜமீன்தார் திரும்பி வந்து ஐந்து வெள்ளி நாணயங்களை அவனிடம் தந்து, ''நீ ஐந்து ஆண்டுகள் செய்த வேலைக்கு இது கூலி. உனக்கு எப்போது திரும்பி வரத் தோன்றி னாலும் நீ இங்கு வரலாம்'' என்றார். ஐந்து ஆண்டுகளாகக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்கிவிட்டு, கூசாமல் மனசாட்சியில்லாமல் ஐந்தே ஐந்து வெள்ளிக்காசு மட்டும் தருகிறாரே என்று ஹீராலால் குமுறினான். அங்கிருந்து கிளம்புகையில் அங்கு வந்த ஜமீன்தாரிணி அவனிடம் ஒரு பொட்டலத்தைக் கொடுத்து, ''உன் வழி நடைப் பயணத்திற்கு இதை வைத்துக் கொள்'' என்று கூறினாள். ஜமீன்தாரிணிக்கும் நன்றியைத் தெரிவித்துவிட்டு, ஹீராலால்

கிளம்பினான். காசி எவ்வளவு தொலைவில் உள்ளது. எத்தனை நாட்கள் பயணம் செய்ய வேண்டும் என்ற விவரங்கள் தெளிவாகத் தெரியாத ஹீராலால் நாள் முழுதும் நடந்து சென்று கொண்டேஇருந் தான். மாலை நேரம் வரை நடந்தபின் களைப்படைந்த அவன், ஒரு மரத்தடியில் அமர்ந்தான். அங்கு ஏற்கெனவே ஒரு கிழவன் படுத்திருந் தான். நீண்ட முடியுடனும், கிழிந்த உடையுடனும் படுத்திருந்த கிழவன், ஹீராலால் தான் ஜமீன்தாரை விட்டு வந்து விட்டதையும் காசியை நோக்கிச் செல்வதையும் பற்றி அவனிடம் விவரித்தான். தன்னுடைய அனுபவங்களையும் பகிர்ந்து கொள்ள விரும்புவதாக கிழவன் தெரிவித்தான்.

பகிர்ந்து கொள்வது என்ற வார்த்தைகளைக் கேட்டவுடன், ஹீராலாலுக்குதன்னிடமுள்ள உணவுப் பொட்டலத்தின் ஞாபகம் வரவே, அந்த உணவை கிழவனுடன் பகிர்ந்து கொண்டான். ' 'நீ மிகவும் களைத்து இருக்கிறாய். ஆகையால் இப்போது படுத்து உறங்கு நாளைக் காலை மீண்டும் உரையாடலாம்'' என்று கிழவன் கூற இருவரும் உறங்கினர்.

அடுத்த நாள் காலை கிழவன் தன்னுடைய அனுபவங்களை ஹீராலாலுக்கு எடுத்துரைத்தான். வெகு நேரம் பேசிய பிறகு அவன் ''ஹீராலால், என் ஒரே சொத்து இந்த புல்லாங் குழல்தான். இதை உனக்கு அளிக் கிறேன்'' என்று கூறி ஒரு புல்லாங் குழலை அளித்தான். அதைப் பெற்றுக் கொண்ட ஹீராலால், "எனக்கு புல்லாங் குழல் எப்படி வாசிப்பது என்று தெரியாதே!'' என்றான்.

அதற்கு அந்தக் கிழவன், '' உனக்கு வாசிக்கத் தெரிய வேண்டாம். இதை நீ உன் உதடுகளில் பொருத்தி ஊதினாலே போதும். தானாகவே குழலோசை உண்டாகும். அதுவும் எப்படிப்பட்ட குழலோசை தெரியுமா? அதைக் கேட்பவர் எல்லாம் தன்னை மறந்து நடனம் ஆட ஆரம்பித்து விடுவார்கள். நீயாக புல்லாங்குழலை வாசிப்பதை நிறுத்தினாலேயொழிய ஆட ஆரம்பித்தவர்கள் நிற்காமல் ஆடிக் கொண்டே இருப்பார்கள். புல்லாங் குழலோசையில் மயங்கி, எல்லாரும் உனக்கு ஏதாவது பணம் தருவார்கள். அதுவே உன் வருமானத்திற்கு வழி



வகுக்கும்'' என்றார். ஹீராலால் கிழவனை விழுந்து வணங்கினான். பிறகு காசியை நோக்கிப் புறப் பட்டான். அப்போது எங்கோ குயில் கூவும் ஒலியைக் கேட்வுடன் அவனுக்கு புல்லாங்குழலை வாசித்துப் பார்க்க ஆவல் ஏற்பட்டது. அதைத் தன் உதடுக ளில் பொருத்தி ஊதியவுடன், மிக இனிமையான ஒலி தானாகவே உண்டாயிற்று.



அப்போது வழியில் சென்று கொண்டிருந்த முரடன் புல்லாங் குழலோசையைக் கேட்டுத் தன்னை மறந்து நடனம் ஆட ஆரம்பித்தான். அவன் ஆடுவதைக் கண்டு உற்சாக மடைந்த ஹீராலால் தொடர்ந்து புல்லாங்குழல் வாசிக்க, அந்த முரடனும் ஆ டிக்கொண்டே இருந்தான். கடைசியில் ஹீராலால் வாசிப்பதை நிறுத்தியவுடன் அந்த முரடன் ஹீராலாலை கட்டித் தழுவிக் கொண்டான். ' 'என் வ ாழ்நாளில் இவ்வளவு மகிழ்ச்சியை நான் அனுபவித்ததேயில்லை. இதை நீ பரிசாக எடுத்துக் கொள்'' என்று தங்க வளையல்கள், வைரமாலைகள் நிரம்பிய ஒரு மூட்டையை அவனிடம் அளித்தான்.

''நான் ஒரு திருடன். இந்த ஆபரணங்கள் பல இடங்களிலிருந்து நான் திருடியவை. நான் திருட்டுத் தொழிலையே விட்டு விடலாம் என்றிருக்கிறேன். ஆகையால் நான் திருடியவற்றை உன்னிடம் கொடுத்து விடுகிறேன்,'' என்று சொல்லிவிட்டு அந்த நகை மூட்டையை கைகளில் திணித்து விட்டு, அந்த முரடன் ஓடி விட்டான். அதை என்ன செய்வது என்ற குழப்பத்தில் சில நிமிடங்கள் ஆழ்ந்திருந்த ஹீராலால் பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாக மேலே நடக்க ஆரம்பித்தான்.

ஆனால் ஓ டிச் சென்ற மு ரடனுக்கு சில மணி நேரங்களுக்குப் பிறகு தான் தவறு செய்து விட்டோம் என்று தோன்றியது. ஏ னென்றால் வி ரைவி லேயே அவன் மனம் மாறிவிட்டது. இவ்வளவு சிரமப்பட்டுத் திருடிய வற்றை அவசரப்பட்டு அந்த சிறு வனிடம் ஏன் கொடுத்தோம் என்றும், எதற்காக திருட்டுத் தொழிலை கை விட வேண்டுமென்றும் தோன்றியது. அதைவிட ஹீராலாலிடம் கொடுத்த நகைகளை மீண்டும் கைப்பற்ற வேண்டும் என்ற எண்ணமும் தலை

தூக்கியது. அதற்குள் அருகிலுள்ள கிராமமே வந்து விட்டது. மறுபடியும் ஹீராலாலை வழிமறித்துத் திருடு வதைவிட, வேறு விதமாகக் கைப் பற்ற அவன் திட்டமிட்டான்.

உடனே அந்த முரடன் ஒரு வியாபாரியைப் போல் வேட மணிந்து கொண்டு பஞ்சாயத்துத் தலைவரிடம் சென்றான். ''தலைவரே ஒரு திருட்டுச் சிறுவன் என்னிட மிருந்து நகைகளை வரும்வழியில் திருடிக் கொண்டான். அவனிட மிருந்து என் நகைகளை நீங்கள்தான் மீட்டுத்தர வேண்டும்'' என்ற நாடகம் ஆடினான். ''கவலைப்படாதே. அந்த சிறுவன் இந்த வழியாகத் தான் செல்ல வேண்டும். அ வனைப் பி டித்து நகைகளை மீட்டு விடலாம்'' என்று பஞ்சாயத்துத் தலைவர் ஆறுதல்



கூறினார். பிறகு நல்ல பலசாலியான சில ஆட்களை வழியில் நி றுத்தி வைத்து ஹீராலாலின் அங்க அடை யாளங்களைக் கூறி அவனைப் பிடிக்குமாறு உத்தரவிட்டார்.

அந்த வழி யாக வந்து கொண் டிருந்த ஹீராலால் பாதையில் கம்பு கழிகளுடன் நின்று கொண்டிருந்த ஆட்களைக் கண்டு திடுக்கிட்டான். அவர்கள் ஓடி வந்து தன்னை அமுக்கிப் பிடித்ததும் ஹீராலால் அதிர்ச்சி அடைந்தான். ஹீராலாலின் கைகள் க ட்டப்பட்டு அ வன் பஞ்சாயத்துத் தலைவர் முன் நிறுத்தப் பட்டான்.

''ஐயா, நான் என்ன குற்றம் செய்தேன்?'' என்று அவன் கேட்டான். அவனை கடுமையாக முறைத்துப் பார்த்த ப ஞ்சாயத்துத் தலைவ ர், ''இதோ இந்த வியாபாரியிடமிருந்து நகைகளைத் திருடி இருக்கிறாய். உடனே அவற்றைத் திருப்பிக் கொடு'' என்று அதிகாரத்துடன் கூறினார்.

''ஐயா, என் கை கட்டுகளை அவிழ்த்து விடுங்கள். அவற்றைத் தந்து விடுகிறேன்'' என்றான். கட்டுகள் அவிழ்க்கப் பட்டவுடன் மூட்டையை அவிழ்த்த ஹீராலால் முதலில் அதிலிருந்து புல்லாங் குழலை எடுத்து ஊத ஆரம்பித் தான். அந்த இனிமையான குழல் ஒலியைக் கேட்ட மாத்திரத்தில் பஞ்சாயத்துத் தலைவர் உட்பட அங்கிருந்த அனைவரும் மயங்கி ஆட ஆரம்பித்தனர். வியாபாரி போல் ந டித்த மு ரடன் ம ட்டும்,

''புல்லாங்குழல் ஊதுவதை நிறுத்தச் சொல்லுங்கள்'' என்று கத்தினான். இதற்குள் மேன்மேலும் கிராமத்து மக்கள் குழல் ஓசையைக் கேட்டு அங்கே கூடி அனைவரும் மெய் மறந்து ஆட ஆரம்பித்தனர்.

முரடன் மட்டும் ''ஐயோ, நிறுத்து. புல்லாங்குழல் ஊதுவதை நிறுத்து. நான் உண்மையை ஒப்புக் கொள்கி றேன்'' என்று கத்தினான். அனை வரும் வியப்புடன் அவனை நோக்கினர். ''ஆமாம். நான் இப்போது உண்மையைச் சொல்கிறேன். ஹீராலால் திருடனில்லை. அவன் என்னிடமிருந்து எதையும் திருட வில்லை. இந்த நகைகள் அனைத் தையும் நான் தான் திருடினேன். அவன் புல்லாங்குழல் இசையில் மயங்கி நான்தான் அவனுக்குக் கொடுத்தேன்'' என்று கூறினான்.

உடனே ஹீராலால் தன்னிடம் இருந்த மூட்டையைத் திறந்து அதில் இருந்த அனைத்து நகைகளையும் பஞ்சாயத்துத் தலைவரிடம் ஒப்படைத்தான். ''இவை திருட்டுப் பொருட்கள். ஆகவே இவை எனக்கு வேண்டாம். இவன் திருட்டுத் தொழிலை விட்டு விடுவதாக வாக்குறுதி தந்தான். அதன்படி இனி திருடமாட்டேன் என்று இவனை சத்தியம் செய்யச் சொல்லிவிட்டு, இவனை விட்டு விடுங்கள்'' என்றான். அவ்வாறே மனந்திருந்திய முரடன் சத்தியம் செய்ய, அவனை பஞ்சாயத்துத் தலைவர் விட்டு விட்டார். அவன் மறைந்ததும் கிராமத்தினர் அனைவரும் ஹீராலாலை சூழ்ந்து கொண்டு பலவாறு அவனைப் புகழ்ந்து அவனை அந்த கிராமத்திலேயே தங்கும்படி வற்புறுத்தினர். பஞ்சா யத்துத் தலைவரும் அவர்களுடன் சேர்ந்து, ''ஹீராலால்! நீ எங்களுடன் இந்த கிராமத்திலேயே இனி இருப்பாய். உனக்கு தங்குவதற்கு ஒரு வீடு ஏற்பாடு செய்து வீடுகிறேன்'' என்று கூற அனைவரும் மகிழ்ச்சி யுடன் கூக்குரலிட்டனர்.

இனி காசிக்குச் சென்று வேலை தேட அவசியமில்லை என்று ஹீராலாலும் நிம்மதியாகப் பெரு மூச்சு விட்டான்.



# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:**



**ச**ந்திரனும் மோகனும் பக்கத்து வீட்டுக்காரர்கள். சந்திரன் ஓர் ஏழை விவசாயி. மோகன் பணக்கார ஜமீன்தார். சந்திரனின் தோட்டத்தில் ஒருமுறை மிகப் பெரிய பறங்கிக்காய் உண்டானது. சந்திரன் அதை எடுத்துப் போய் மன்னருக்குப் பரிசாக அளித்தான். அரசவைத் தலைவர்கள் சந்திரனுடைய முயற்சியைப் பெரிதும் பாராட்டி, அவனுக்குப் பரிசு அளிக்குமாறு மன்னருக்கு சிபாரிசு செய்தனர். மன்னரும் சந்திரனுக்கு நூறு பொற்காசுகள் பரிசு அளித்தார்.

இதையறிந்த மோகன் சந்திரன் மீது பொறாமை கொண்டான். யானை அளவு பெரிதான ஒரு பறங்கிக்காயை அளித்ததற்காக, மன்னர் நூறு பொற்காசுகள் பரிசு தந்தார் எனில், தான் ஒரு யானைக்குட்டியையே மன்னருக்குப் பரிசாக அளித்தால் தனக்கு மன்னர் எத்தனை பொற்காசுகள் தருவார் என்ற நம்பிக்கையில் அதிக விலை கொடுத்து ஒரு யானைக்குட்டியை வாங்கி, மோகன் மன்னருக்குப் பரிசாக அளித்தான். ''இவனுக்கு என்ன பரிசு தரலாம்?'' என்று மன்னர் தன் மந்திரியைக் கேட்டார்.

- மந்திரி அதற்கு என்ன பதில் கூறியிருப்பார்?
- மன்னர் முடிவாக என்ன செய்திருப்பார்?

உங்கள் விளக்கங்களை 100-150 வார்த்தைகளில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து அதன் மீது கதைப் போட்டி என எழுதி கீழ்க்காணும் கூப்பனையும் சேர்த்து அனுப்பவும்.

## முடிவு தேதி : மார்ச் 31, 2005

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் ---------------------------------------------------------------------------

வகுப்பு------------------------------வீட்டு முகவரி---------------------------------------

------------------------------------------------------------------------------------------------

----------------------------------------------------------------பின்கோடு--------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்


**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# மதிக்கத் தெரியாதவன்

மகத நாட்டை விருபசேனன் ஆண்ட போது போதிசத்வர் ஒரு யானையாகப் பிறந்தார். அந்த யானை தேவலோக யானை ஐராவதம் போல வெள்ளை யாக இருந்தது. அதனால் மகத மன்னன் தன் பட்டத்து யானையாக அதனை வைத்துக் கொண்டான்.

ஒருமுறை ஏதோ ஒரு விழா நடக்க மகத நாடே தேவலோகம் போல அலங்கரிக்கப்பட்டது. தலைநகரில் பிரம்மாண்டமான ஊர்வலம் நடக்க ஏற்பாடாகியது. அதற்காகப் பட்டத்து யானை நன்கு அலங்கரிக்கப்பட்டது. வீரர்கள் யானையின் முன்னும் பின்னுமாக நடக்க, மகத மன்னன் அதன் மீது கம்பீரமாக அமர்ந்து சென்றான்.

வழி நெடுக்க மக்கள் கூடி ''ஆகா! அந்த யானைதான் எவ்வளவு அழகாக இருக்கிறது! என்ன நடை! என்ன கம்பீரப் பார்வை!!'' என்று அந்தப் பட்டத்து யானையைப் புகழ்ந்தார்கள்.

இப்படி யானையை மக்கள் புகழ்வது மன்னனுக்குப் பிடிக்க வில்லை. அவன் தன் மனதில் 'நான் அரசன். எனக்கு இவர்கள் மரியாதை அளிக்காமல் இந்த யானைக்கு அளித்து அதனைப் புகழ்கிறார்களே. இந்த யானையை ஒழித்தால் தான் இவர்கள் என்னைப் புகழ்வார்கள்' என்று தீர்மானித்துக் கொண்டான்.

அவன் யானைப்பாகனை அழைத்து ''இந்தப் பட்டத்து யானை நன்கு பழக்கப்பட்டதுதானா? '' என்று கேட்டான். அவனும் ''இதனைப் பழக்கி இ தன் மீ து அம்பாரியை வைத்தவன் நானே'' என்றான். மன்னரோ ''இந்த யானை கட்டுக்கு அடங்காமல் இருக்கும் போலி ருக்கிறது. இது நன்கு பழக்கப்பட்ட யானை என்பதில் எனக்குச் சந்தேகமே'' என்றான். யானைப் பாகனும் ''அப்படி எல்லாம் இல்லை'' எனவே மன்னனும் ''அப்படி யானால் இதனைப் பரீட்சித்துப் பார்க்கலாம். உன்னால் இதை அந்த உயரமான

– ஜாதகக் கதை –

மலை மீது ஏறச் செய்ய முடியுமா?'' என்று கேட்டான்.

யானைப்பாகனும் ''ஓ! முடியும்'' என்று கூறி யானையை அம்மலை மீது போகவும் செய்து விட்டான். அரசனும் தன் சில ஆட்களோடு அந்த மலையின் உச்சிக்குப் போனான். ஓரிடத்தில் செங்குத்தான பாறையும் மேலே மிகச் சிறிய இடம் சமதள மாகவும் இருந்தது.

மன்னன் யானையை அங்கே நிறுத்தச் சொல்லி யானைப் பாகனிடம் ''எங்கே இதனை அந்த இடத்தில் மூன்று காலால் நிற்கச் செய் பார்க்கலாம்'' என்றான். யானைப் பாகனும் யானையிடம் அவ்வாறு செய்யும்படிக் கூறவே அதுவும் அவ்வாறே செய்தது.

அரசனுக்கு யானையை எப்படி யாவது கொல்ல வேண்டும் என்ற எண்ணம் இருந்ததால் யானைப் பாகனிடம் ''சரி, அதனை இப்போது அதன் இரு பின் கால்களால் நிற்கச் சொல்'' என்றான். யானைப்பாகனும் யானையிடம் அரசனின் கட்டளை யைக் கூறவே அதுவும் தன் பின் கால்கள் இரண்டால் மட்டும் நின்று காட்டியது.

அடுத்து மன்னன் யானையை முன் கால்கள் இரண்டால் மட்டும் நிற்க வைக்கச் சொல்லவே யானைப் பாகனும் சற்றுத் திகைத்து அரசனின் கட்டளையைக் கூறினான். யானையும் அந்த அபாயகரமான இடத்தில் தன் முன்னங்கால்கள் இரண்டால் நின்றது. இதைக் கண்ட யாவரும்



'ஆகா' என வியந்து யானையைப் பாராட்டினார்கள். மன்னனுக்கோ ஒரே எரிச்சல். அவன் யானைப் பாகனிடம் ''சரி. இப்போது அதை ஒற்றைக் காலால் நிற்கச் சொல்'' என்றான். யானைப்பாகனுக்கு மன்னன் மனதில் என்ன நினைக்கிறான் என்பது தெரிந்து விட்டது. யானை யிடம் அரசனின் அந்தக் கட்டளை யைக் கூறவே யானையும் ஒற்றைக் காலால் நின்றது. அது கண்டு மன்னன் ''இதெல்லாம் எந்த சாதாரண யானையும் செய்யும். ஆனால் இது தரையில் நடப்பது போல ஆகாயத்தில் நடக்க முடியுமா? அங்கே நடக்கச் சொல் பார்க்கலாம்'' என்றான்.

யானைப்பாகனுக்கு அப்போது மன்னன் யானையைக் கொல்லவே விரும்புகிறான் என்பது உறுதியாகி

விட்டது. அவன் யானையிடம் அரசனின் கட்டளையைக் கூறி ''உன் மதிப்பை அறியாத மூடன் இந்த மன்னன். நீ உன் மகத்தான சக்தியால் இவன் விரும்புவது போல ஆகாயத் தில் உயரக் கிளம்பி நடந்து காட்டு'' என்றான்.

யானையும் கம்பீரமாக அந்த மலை உச்சி மீது நடந்து அங்கிருந்து ஆகாயத்திலும் தரை மீது நடப்பது போலவே நடந்து போகலாயிற்று. அப்போது யானைப்பாகன் ''மன்னனே! நீ இந்த யானையை எப்படியாவது கொல்ல வேண்டும் என்று முயன் றாய். ஆனால் இதன் மகத்தான சக்தியை அறியாத நீ அதனிடம் தோற்றுப் போனாய். அந்த யானை உன்னிடம் இருக்க தகுந்ததே அல்ல. வேறு நல்ல இடத்தில் இருக்க வேண்டியது. நீ இனி அதனை அடைய மு டியாது. ந ானும் அ ந்த யானை செல்லும் இடத்திற்கே போகிறேன்'' எனக் கூறிக் கிளம்பிப் போய் விட்டான்.

ஆகாயத்தில் நடந்து சென்ற யானை காசி நகரை அடைந்தது. அந்த நகர மக்கள் ஒரு யானை வான வீதியில் நடந்து வந்து தம் நகரில் இறங்குவதைக் கண்டனர். ஒரே உற்சாகத்துடன் அதனை அவர்கள் வரவேற்றார்கள். காசி மன்னனும் அந்த யானை முன் போய் கைகூப்பி நின்று ''கஜராஜனே! வருக! வருக!! உம் வரவால் என் நாடே செழிப்புற்று சுகவாழ்வு பெறப் ே பாகிறது'' என்றான்.

இதே சமயம் அந்த யானையை மகத மன்னனிடம் இருந்து ஓட்டிய யானைப்பாகனும் வந்து சேர்ந்தான். அவன் காசி மன்னனிடம் யானை யுடனும், அவனிடமும் மகத மன்னன் எவ்வாறு நடந்து கொண்டான் என்று நடந்த அனைத்தையும் கூறி அந்த யானையின் மகத்துவத்தை எடுத்து உரைத்தான்.

காசி மன்னனும் அது போதிசத்வர் என அறிந்து தன் நாட்டை மூன்று பாகங்களாக்கி ஒரு பாகத்தை அந்த யானையின் ஆட்சியிலும் மற்றதை யானைப்பாகனின் ஆ ட்சியிலும் மூன்றாவது பகுதியைத் தானுமாக ஆட்சி புரிந்து வர ஏற்பாடு செய்தான். காசி நாடும் அந்த யானை வந்ததில் இருந்து சுகவாழ்வு பெற்றது.





# மகாவிஷ்ணு

இராமர் அரியாசனத்தில் அமர்ந்தார். இலட்சுமணன், பரதன், சத்துருகனன் ஆகியோரின் துணை கொண்டு நாட்டை நன்கு ஆண்டு வரலானார். மக்கள் அவரது ஆட்சியில் சுக வாழ்வு வாழ்ந்தனர்.

ஒருநாள் காலை ஒரு கிராமத்தில் இருந்து ஒரு அந்தணன் இறந்து போன தன் ஐந்து வயது மகனின் உடலை எடுத்துக் கொண்டு வந்து இராமரின் அரண்மனை வாசலில் நின்று அழலானான். அவன் ''என் ஒரே மகன் இறந்து விட்டான். இதற்குக் காரணம் இராமரின் ஆட்சி சரியாக நடக்காததேயாகும். இல்லாவிட்டால் இந்த மாதிரி அகால மரணம் ஏற்படுமா? என்று வெறுப்புடன் கூறினான்.

இதைக் கேட்ட இராமர் மிகவும் கவலை கொண்டார். உடனே தன் மந்திரிகளையும் வசிஷ்டர் முதலான பிராமண சிரேஷ்டர்களையும் சபைக்கு வரவழைத்து பிராமணச் சிறுவன் அகால மரணம் அடைந்தது பற்றிக் கூறினார். அப்போது அங்கு வந்த நாரதர் ''இப்போது சம்புகன் என்ற தாழ் குலத்தவன் கடுந்தவம் புரிகிறான். அது தர்ம நியாயங்களுக்கு ஏற்றதாக இல்லை. அதனால்தான் பிராமணச் சிறுவன் இறந்தான்'' என இராமரிடம் கூறினார்.

இராமரும் இலட்சுமணனிடம் ''நீ போய் அந்த பிராமணனுக்கு ஆறுதல் கூறி அச்சிறுவனின் உடலை தைலங்கள் தடவி பத்திரமான இடத்தில் வை'' எனக் கூறினார். பிறகு அவர் புஷ்பக விமானத்தில் ஏறி நாலா பக்கங்களிலும் போய்த் தேடி முடிவில் தென் திசையில் ஒரு



மனிதன் க டுந்தவம் பு ரிந்து கொண்டிருப்பதைக் கண்டார்.

உடனே இராமர் விமானத்தை அங்கே இ றக்கினார். அ திலிருந்து இறங்கி அவர் அம்மனிதனை அணுகித் தம் வாளால் அவனது தலையை வெட்டினார். வெட்டுண்ட சம்புகனின் தலையிலிருந்த கண்கள் இராமரைப் பார்த்து மகிழ்ந்தன. அத்தலையும் ''மகானுபாவா! மரணம் என்பது மனிதனுக்கு ஏதாவது ஒரு விதத்தில் வரத்தான் வரும். நீங்கள் மன்னர். நாட்டின் தர்மத்தைக் காப்பவர். என் மரணத்திற்கு நீங்கள் ஒரு சாதனம். இதனால் உங்களை எந்தப் பாவமும் அணுகாது. நானும் விஷ்ணு லோகத்தை அடைவேன்'' எனக் கூறிக் கண்களை மூடியது. சம்புகனின் மனைவியும் இராமரிடம் அவர் தம் கடமையையே செய்ததாகக் கூறித் தன் கணவனின் உடலோடு உடன்கட்டை ஏறினாள்.

விசுவாமித்திரர் ஒரு நாள் இராமரின் சபைக்கு வந்து அவரிடம் தன்னை அவமதித்த சகுந்தன் என்ற மன்னனை தண்டிக்குமாறு கூறினார். இராமரும் சகுந்தனைக் கொல்லக் கிளம்பிச் சென்றார். அனுமாரின் தாய் அஞ்சனாதேவி சகுந்தனுக்கு அபயம் அளித்தாள். அனுமார் தன் தாயாரின் வாக்கை நிலை நிறுத்த இராமரை எதிர்த்தவாறே இராமரது திவ்ய நாமங்களை உச்சரிக்கலானார். அதனால் இராமர் எய்த அம்புகள் எல்லாம் அனுமாரின் இதயத்துள் அடங்கின.

இதைக் கண்ட விசுவாமித்திரர் கோபத்தை விட்டு சகுந்தனை மன்னித்து அவனைஆசீர்வதித்து விட்டுச் சென்றார்.

ஒரு நாளிரவு ஒரு நாய் இராமரின் படுக்கை அறை முன் வந்து குரைத்து நியாயம் வழங்க வேண்டியது. அவர் எழுந்து வந்து அதன் காயத்திலிருந்து வடிந்த ரத்ததைத் துடைத்தார். அதன் காயம் ஆறவே அதுவும் போய் விட்டது.

இப்படி யாவரும் இராமரது ஆட்சியில் சுகமாக இருக்கையில் ஒரு அற்பப்பயல் ''பிறர் வீட்டில் இருந்த தன் மனைவியை இந்த இராமன், வெட்கமில்லாமல் தன் வீட்டிற்கு அழைத்து வ ந்திருக்கிறானே. என்ன தலைகுனிவான செயல்'' எனக் கூறியது இராமருக்குத் தெரிந்தது.

அவர் உடனே இலட்சுமணனிடம் சீதையைக் காட்டில் விட்டு வருமாறு

கட்டளையிட்டார். இலட்சுமணன் கோபத்தோடு ''யாரோ ஒரு அற்பன் சொன்னதற்காக இப்படிச் செய்ய லாமா?'' எனவே இராமரும் ''அவன் இதனை வெளிப்படையாகக் கூறினான். இது போன்ற எண்ணம் பலரது மனதில் தோன்றி இருக்கலாம். அவர்கள் கூறாமல் இருக்கலாம். ஆட்சியில் விருப்பு வெறுப்பு என இல்லாது சமநிலையில் இருக்க வேண்டும்'' என்றார்.

முனிபத்தினிகளுடன் ஒரு சில நாட்கள் காலம் கழிக்க விரும்புவதாக கர்ப்பவதியான சீதை இராமரிடம் சில நாட்களுக்கு முன்தான் கூறி இருந்தாள். அதை நிறைவேற்றச் சொன்னதாக இராமர் கட்டளை இட்டார் என இலட்சுமணன் சீதை யிடம் கூறி அவளைக் காட்டிற்குக் கொண்டு போய்விட்டு வந்தான்.

சீதை இராமரது முடிவு கேட்டு திகைத்து விழுந்தாள். மயங்கி விழுந்த அவளை அங்கே ஆசிரமம் அமைத்து வாழ்ந்து வந்த வால்மீகி முனிவர் தம் குடிலுக்கு எடுத்துச் சென்றார். சீதையும் உரிய காலத்தில் லவன், குசன் என்ற இரு மைந்தர் களைப் பெற்றெடுத்தாள்.

அயோத்தியில் மழை பொய்த்தது. சரியான மழை இல்லாது பூமி பாளம் பாளமாக வெடிக்கலாயிற்று. இதனால் அசுவமேதயாகம் செய்யு மாறு இராமரிடம் பல பெரியோர்கள் யோசனை கூறினார்கள். தங்கத்தில் சீதையின் சிலையைச் செய்ததும் அருகில் வைத்துக் கொண்டு இராமர்



அந்த யாகத்தைச் செய்யலானார். வால்மீகி முனிவர் தம் ஆசிரமத்தில் இருந்த லவனுக்கும் குசனுக்கும் இராமாயணத்தைச் சொல்லிக் கொடுத்து இசையோடு பாடப் பழக்கி வந்தார். லவனும் குசனும் ஆசிரமத்தின் பக்கம் வந்த இராமரது அசுவமேதயாகக் குதிரையைப் பிடித்து கட்டினர். இதனால் இலட்சுமணன், பரதன், சத்துருகனன் ஆகியோர் அந்த இரு சிறுவர்களுடன் போரிட்டு நினைவிழந்து விழுந்தனர். அப்போது இராமர் அவர்களை எதிர்க்க வந்தார்.

லவனும் குசனும் தம் தாய் மீது ஆணையிட்டு இராமர் மீது அம்பு களை எய்யவே அவரும் நினை விழந்து விழுந்தார். அது கேட்டு சீதை ஓடி வந்து இராமர், இலட்சுமணன், பரதன் ஆகியோரின் மயக்கத்தைப்

போக்கினாள். வால்மீகி முனிவர் சீதையையும் லவனையும் குசனையும் இராமரிடம் ஒப்படைத்தார். இராமர் சீதையுடன் அரியாசனத்தில் அமர்ந்து ஆட்சி புரிந்தார். லவனுக்கும் குசனுக்கும் இளவரசுப் பட்டம் கட்டினார்.

சீதையோ தன் புனிதத்தன்மையை அயோத்தி மக்களுக்குக் காட்ட ஆகாயத்தை நோக்கி மழை பொழிய வேண்டும் எனக் கூறினாள். அடுத்த வினாடியே ஆகாயத்தில் மேகங்கள் நிறைந்து அடர் மழை பெய்தது!

அப்போது சீதை பூமாதேவியைப் பார்த்து ''அம்மா! இனி எனக்கு இங்கு வேலை இல்லை. என்னை அழைத்துக் கொள்'' என்றாள். மறுநிமிடம் தரை பிளந்து தங்க சிம்மாசனத்தில் அமர்ந்தவாறு பூமாதேவி உயர வந்தாள். அவள் சீதையைத் தன் பக்கத்தில் அந்த ஆசனத்தில் அமர்த்திக் கொண்டு மீண்டும் தரைக்குள் சென்று மறைந் தாள். பிளந்த தரை மூடி முன் போலாகிவிட்டது.

இராமர் சீதையை மீட்கத் தன் வில்லில் அம்பை வைக்கவே ஒரு அசரீர வாக்கு ''இராமா! சீதை பூமாதேவியின் மகள். மகள் தாயை அடைந்து விட்டாள். அதனால் பூமியைப் பிளக்காதே'' எனக் கூறியது.

இராமர், லவனுடனும் குசனுடனும் சேர்ந்து ஆட்சி புரிந்து வரலானார். அப்போது ஒரு நாள் எமதர்மன் ஒரு பிராமணனின் வடிவில் வந்து ''தேவ



இரகசியம் ஒன்று தங்களுக்குத் தனிமையில் சொல்ல வேண்டும். இலட்சுமணனைக் காவலாக வாசலில் நிறுத்தி யாரையும் உள்ளே வரவிடாமல் பார்த்துக் கொள்ளச் சொல்லுங்கள். அப்படி அவன் யாரையாவது அ னுமதித்தால் அவனுக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும்'' என்றான். இராமரும் அதற்கு இசைந்து இலட்சுமணனை வாசலில் காவலாக நிற்கச் சொல்லி அந்த பிராமணனிடம் தனிமையில் தேவ இரகசியம் கேட்கத் தயாரானார்.

எமதர்மனும் தன் உண்மை உருவில் இராமர் முன்வந்து, அவரிடம் ''தாங்கள் எடுத்த அவ தாரத்தின் வேலை முடிந்தது. இனி விஷ்ணுவாகி வைகுண்டம் செல்ல வேண்டும்'' எனக் கூறினான்.

அப்போது துர்வாச முனிவர் இராமரைக் காண வந்தார். துர்வாச முனிவருக்கு இராமரைக் காண வழி விடாமல் இ லட்சுமணன் குறுக்கே நிற்கவே அவர் ''நான் இப்போதே இராமரைக் காண வேண்டும். எனக்கு வழி விடுகிறாயா அல்லது ரகு வம்சத் தையே சபிக்கட்டுமா?'' என கோபக் கனல் பறக்கக் கேட்டார். இலட்சு மணன் துர்வாச முனிவரை உள்ளே செல்வதற்கு அனுமதி அளித்து விட்டு தான் சரயு நதிக்குப் போய் அதில் குதித்து உயிரை விட்டான்.

இதை அறிந்ததும் இராமர் பரத, சத்ருகனர் சூழ்ந்து வர சரயு நதிக்குச் சென்றார். அவரும் அந்த நதிக்குள் செல்ல பரதனும் சத்துருகனனும்



அவரைப் பின்பற்றி நதிக்குள் சென்றனர்.

சீதை வைகுண்டத்தில் இலட்சுமி தேவியாக சேஷசயனத்தில் அமர்ந்து இராமர் விஷ்ணுவாகி வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். பரதனும் சத்ருகனனும் சங்கு சக்கரங்களாக மாறிச் சென்றனர். இலட்சுமணன் தான் சேஷநாகமாக மாறி முன்பே சென்று இராமர் இருக்கச் சுருண்டு இருந்தார். இராமரும் தம் அவதாரத்தை முடித்து விஷ்ணுவாகி சேஷசயனத்தின் மீது அமர்ந்தார்.

இவ்வாறு சூத மகரிஷி இராமா வதாரம் பற்றிக் கூறி விட்டு கிருஷ்ணாவதாரம் ப ற்றி எ டுத்துக் கூறலானார்.

ஒரு முறை சிவன் தன் பக்தர்களான ராட்சசப் பிரமுகர்களை விஷ்ணு

அழிப்பது கண்டு கோபம் கொண்டு தன் கண்களிலிருந்து தீப்பொறி வரச் செய்து பலசாலியை உருவாக்கினார். பலத்த ஆயிரம் கவசங்களையும் சக்தி வாய்ந்த குண்டலங்களையும் கொண்ட அவன் ''நான் பயங்கர ராட்சசன் மட்டுமல்ல. சிவனின் அம்சமும் கொண்டவன். அந்த விஷ்ணுவால் கூட என்னை ஒன்றும் செய்து விட முடியும்?'' எனக் கர்ஜித்தவாறே அட்டூழியங்கள் புரியலானான்.

விஷ்ணு நர நாராயணன் என்ற இரு முனிவர்களாக அவதரித்தார். இருவரும் அந்த பலசாலியான சகஸ்ரகவசனைக் கொல்லும் சக்தி பெறத் தவம் செய்தனர்.

இந்திரன் அவர்களது தவத்தைக் கலைக்க அப்சரப் பெண்களை அனுப்பினான். நாராயணன் தன் தொடையிலிருந்து ஊர்வசி பிறந்து வரச் செய்யவே ரம்பை முதலான அப்சரப் பெண்கள் அவளைக் கண்டு நடுங்கினார்கள். நாராயணன் அவர்களிடம் ஊர்வசியையும் தேவலோகத்திற்கு அழைத்துச் செல்லுமாறு கூறவே அவர்களும் அவளை அழைத்துச் சென்றனர்.

நாராயணனும் நரனும் தவம் செய்யும் போது முறை போட்டுக் காவல் புரிந்தார்.

அப்போது சகஸ்ரகவசனுடன் அவர்கள் ஆயிரம் வருடங்கள் போர் புரிந்து தொள்ளாயிரத்து தொண்ணூற்றொன்பது கவசங்களை அந்த ராட்சசன் உடலிலிருந்து அறுத்துத் தள்ளினார்கள்.

ஒரே ஒரு கவசம் மிகுந்ததால் அந்த ராட்சசன் பயந்து ஓடி சூரியனில் ஒளிந்து கொண்டான். விஷ்ணுவும் ''இவன் இப்போது பயந்து ஓடி விட்டான். போனால் போகட்டும் இது இவனைக் கொல்வதற்கான தருணம் அல்ல. அவனை சற்று விட்டுத்தான் பிடிக்க வேண்டும். பிற்காலத்தில் நான் கிருஷ்ணாவதாரம் எடுக்கப் போகிறேன். அவனை அந்தக் கிருஷ்ணாவதாரத்தின் போது ஒழித்து விடலாம்'' எனத் தீர்மானித்துக் கொண்டார்.



# குடை புதிதாகவே இருப்பதேன்?

**கோ**டை வெயில் சுட்டெரித்தது. ராமுவுக்கு அவசர வேலையாக கடைக்குச் செல்ல வேண்டியிருந்ததால், கையில் குடையுடன் கிளம்பினான். அதே சமயம் பக்கத்து வீட்டு பாலுவும் தன் கையில் குடையுடன் வெளியே கிளம்பிக் கொண்டிருந்தான். இருவரும் சந்தித்து ஒன்றாக உரையாடிக் கொண்டே சென்றனர். அப்போது ராமுவின் குடையை உன்னிப்பாகக் கவனித்த பாலு, ''ராமு, இரண்டு ஆண்டுகளுக்குமுன் நாமிருவரும் சேர்ந்து ஒரே நாளில்தான் கடையிலிருந்து புதிதாகக் குடைகள் வாங்கினோம். என்னுடையது மிகப் பழசாக நைந்து போய் விட்டது. உன்னுடையது மட்டும் நேற்று வாங்கினாற்போல் புதியதாக இருக்கிறதே, எப்படி?'' என்று கேட்டான்.
''அதுவா! நான் அடிக்கடி குடையை ரிப்பேர் செய்து வைத்துக் கொள்வதால் பார்க்க அப்படித் தெரிகிறது'' என்றான் ராமு.

''அது எப்படி ராமு? நானும்தான் எனது குடையை அடிக்கடி ரிப்பேர் செய்கிறேன். என்னதான் நன்றாக ரிப்பேர் செய்தாலும், பழைய குடை பழைய குடைதானே! உன்னுடையது புத்தம் புதியதாக இருக்கிறதே!'' என்றான் பாலு.

''அது எப்படி என்று எனக்கும் புரியவில்லை பாலு. இரண்டு வாரங்களுக்குமுன் விறகுக் கடைக்குச் சென்றிருந்தேன். அங்கே நமது லட்சுமணனும் வந்திருந்தான். இருவரும் எங்கள் குடைகளை மேஜை மீது வைத்து விட்டு விறகு வாங்கினோம். விறகு வாங்கிக்கொண்டு குடைகளை எடுத்துக் கொண்டு வீடு திரும்பினோம். அன்று விறகுக் கடையிலிருந்து வந்ததிலிருந்து என் குடை ஏதோ புதியதாகத் தெரிகிறது'' என்றான் ராமு.

சரிதான், இதுதான் ராமுவுடைய குடை புதியதாக இருப்பதன் காரணமா என்று தனக்குள்ளேயே பாலு சிரித்துக் கொண்டான். **-ராம்குமார்.**





# பசிக்கு மருந்து

ஒருமுறை உதயகிரி ராஜ்யத்தில் கடும் பஞ்சம் உண்டாயிற்று. ராஜா தனது மந்திரிகளையும், அதிகாரிகளையும் வரவழைத்து ஆலோசனை நடத்தினான். ''நமது ராஜ் யத்தில் இப்போது பஞ்சம் தலை விரித்தாடுகிறது. மக்களுக்கு பசியே எடுக்காதவாறு ஒரு மருந்தை நமது வைத்தியர்கள் கண்டு பிடித்து விட்டால், இந்த பஞ்சத்திலிருந்து நாம் விடுபடலாம்'' என்று ராஜா அறிவித்தான்.

ராஜாவின் இந்த யோசனைக்கு பதில் அளிக்காமல் அனைவரும் மௌனமாக இருந்தனர். முதல் மந்திரி சுபுத்தி மட்டும் தைரியமாக முன் வந்து, ''பசிக்கு மருந்து கண்டு பிடிப்பதால் பஞ்சம் தீருமோ, தீராதோ தெரியாது. ஆனால் அதனால் பல விபரீதங்கள் நேரிடும் என்பது மட்டும் நிச்சயம்'' என்றார். முதன் மந்திரியின் பதிலைக் கேட்டு கோபமுற்று ராஜா கத்தினான். இதனால் மறு வார்த்தை பேச யாருக்கும் துணிவில்லை.

''சரி! இன்றிலிருந்து ஒரு மாதத்திற்குள் பசிக்கு மருந்து கண்டு பிடிக்கும் பொறுப்பை உங்களிடம் தருகிறேன்'' என்று தன் வைத்தியர்களிடம் கூறினான். இது முடியாத காரியம் என்று தெரிந்தும். அரசனை எதிர்த்துப் பதில் சொல்ல எந்த வைத்தியரும் முன் வரவில்லை. இறுதியில் ஒரேயொரு வைத்தியர் மட்டும், ''மன்னிக்க வேண்டும் மகாராஜா! பசியே எடுக்காமல் செய்யவல்ல மருந்தைப் பற்றி எந்த மருத்துவ நூலிலும் சொல்லப்பட வில்லை'' என்றார்.

''அப்படியானால் உங்கள் அனைவரையும் சிறையில் அடைக்க உத்தரவு இடுகிறேன்'' என்றான் ராஜா கோபத்துடன். அப்போது சபையில் ஒரு கிழவர் நுழைந்தார். ''ராஜா, யாரையும் சிறையில் அடைக்க வேண்டும். ஒரு வாரத்திற்குள் அதற்

-25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை-

கான மருந்துடன் நான் வருகிறேன்'' என்றார். ''சபாஷ்! வைத்தியர் என்றால் இவரைப் போல் இருக்க வேண்டும்'' என்று ராஜா அவரைப் பாராட்டினார்.

சில நாட்களுக்குப் பிறகு அந்த கிழவர் ராஜாவை நாடி வந்து பனை நுங்கினைப் போல் தோற்றமளித்த ஒரு மருந்து உருண்டையைக் காட்டி ''ராஜா, இந்த மருந்தில் ஒரு குன்றுமணி அளவு ஒவ்வொருவரும் சாப்பிட்டால் அவர்களுக்கு வாழ்நாள் முழுதும் பசியே எடுக்காது'' என்றார். ராஜாவும் மகிழ்ந்து போய் உடனே அந்த மருந்தை குடிமக்கள் அனைவருக்கும் விநியோகம் செய்யுமாறு உத்தரவிட்டான். அரண்டமனைவாசி களைத்தவிர மற்றவர்கள் அனைவரும் அதை சாப்பிட்டனர். விரைவிலேயே ராஜ்யத்தில் மக்களுக்குப் பசி என்பது அறவே மறைந்து விட்டதாக ராஜாவுக்கு செய்தி கிடைத்தது.

ஆனால் சில நாட்களிலேயே முதன் மந்திரி ராஜாவிடம் ''மகாராஜா, குடி மக்கள் யாவரும் வேலை செய்வதை நிறுத்தி விட்டனர். பசி இல்லாததால் அவர்களுக்கு வேலை செய்ய வேண்டிய அவசியம் இல்லாமல் போய் விட்டது'' என்று அறிவித்தார்.

''அதனாலென்ன! என்று ராஜா பதில் அளித்தான். சில நாட்களுக்குப் பிறகு முதல் மந்திரி மீண்டும், ''ராஜா, ராஜ்யத்தில் எல்லாரும் அவரவர்கள் தொழிலை நிறுத்தி விட்டதால் ஒரு பொருளும் கிடைப்பதில்லை'' என்று அறிவித்தார். ராஜா கவலையில் ஆழ்ந்தான்.

சில நாட்களுக்குப் பிறகு மந்திரி ''மக்கள் இப்போது சட்ட விரோத மான செயல்களைச் செய்கிறார்கள்''



என்றதும் ராஜா கோபத்துடன் ''நமது சேனை வீரர்களைக் கொண்டு சட்ட விரோதிகளைப் பிடித்துச் சிறையில் அடையுங்கள்'' என்று கத்தினான்.

சேனை வீரர்களா? அப்படி யாருமேயில்லை'' என்றார் மந்திரி.

அப்போது சேனாதிபதி கலவரத்துடன் அங்கு வந்து, ''ராஜா, நமது பகைவன் பிரசண்டன் படையெடுத்து வந்து, நமது கோட்டையை முற்றுகை இட்டிருக்கிறான். அவனுடன் எதிர்த்துப் போரிட நமது வீரர்கள் யாருமேயில்லை'' என்றான்.

''இப்போது நாம் என்னதான் செய்யலாம்? '' என்று ராஜா எரிச்சலுடன் கேட்டான். ''ராஜா பேசாமல் நாம் பகைவர்களிடம் சரணடைந்து விடலாம்'' என்றான் சேனாதிபதி.

இதற்குள் பகைவர்கள் சபைக் குள்ளேயே நுழைந்து விட்டனர். பகைவர்களுடைய சேனைத்தலைவன் ராஜாவை நோக்கி, ''உங்களுடைய ராஜ்யம் இப்போது எங்கள் வசத்தில் உள்ளது. மறுப்பு ஏதும் தெரிவிக் காமல் உங்களை விலங்கிட கைகளை நீட்டுங்கள்'' என்று கட்டளையிட்டான்.

''ஆகா! என்னுடைய முதல் மந்திரியின் அறிவுரையைக் கேட்டு நடந்திருந்தால் இந்த ஆபத்து நேரிட்டிருக்காது'' என்று ராஜா வருத்தப்பட்டான்.

அப்போது பசி மருந்து தயாரித்த கிழவன் ராஜாமுன் வந்தான். ''மகாராஜா! இப்போதாவது உங்கள் கண் திறந்ததே! மிக்க மகிழ்ச்சி'' என்று கூறி தன் வேடத்தைக் கலைத்தான். அந்தக் கிழவன் வேறு யாருமில்லை. முதல் அமைச்சர் சுபுத்திதான்.

''மகாராஜா! என்னை மன்னிக்கவும். உங்களுக்கு நல்ல புத்தி கட்டுவதற்காக நான்தான் இந்த நாடகம் ஆடினேன். இவர்கள் பகைவர்கள் அல்ல. நமது நாட்டு வீரர்கள் தான். நீங்கள் இதுவரை கண்டது கேட்டது எல்லாமே நானியற்றிய நாடகம். பஞ்சத்தைப் போக்க தாங்கள் எடுத்துக் கொண்ட வழிமுறை தவறானது என்பதைச் சுட்டிக் காட்டவே நான் இவ்வாறெல்லாம் செய்ய நேரிட்டது'' என்று கூறி முதல் மந்திரி மீண்டும் ராஜாவை வணங்க, ராஜாவுக்கும் கவலையெல்லாம் தீர்ந்து பழையபடி ஆனான்.



20

சிம்மாசனத்தை நயவஞ்சகமாகக் கைப்பற்றிய சேனாதிபதி வீரசிம்மன் தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்ட எடுத்துக் கொள்ளும் முயற்சிகளில் தோல்வியுறுகிறான். ஜெயநகரத்தில் பூமியில் கிடைத்த ஒரு தங்க விக்கிரகத்தைப் பற்றிய தகவல் கிடைத்ததும் சுகதேவனிடம் அதைக் கொடுத்தனுப்பக் கட்டளையிடுகிறான். சுகதேவன் மறுக்க, அவன் மாளிகையை வீரசிம்மன் ஆட்கள் முற்றுகையிடுகின்றனர்.

# சூர்யா

## வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா

அணித்தலைவன் வெளியே வருகிறான்.

எங்களால் அந்த சிலையை வெளியே எடுக்க முடியவில்லை

விக்கிரகத்தை முன்பே பிரதிஷ்டை செய்து விட்டாயா, சுகதேவா?

சுகதேவன் பதிலேதும் சொல்லாமல் இருக்கிறான்.

தரையை உடைத்து அதை வெளியே எடு.

சரி தலைவரே!

ஜபர்சிங்கும் அணித் தலைவனும் விக்கிரகத்திற்குக் காவலாக வண்டியின் பின்னால் செல்கிறார்கள்.

தரையை உடைக்கும் சத்தம் கேட்கிறது. சில நேரங்கழித்து...

தேவி! உனக்காக ஒரு கோயில் கட்டுவோம்.

விக்கிரகம் வெளியே எடுக்கப்படுகிறது

வா!

ஆசிரமத்தில் ஜெயானந்தர் ஆழ்ந்த தியானத்தில் இருக்கிறார்.



திடீரென அவர் எழுந்து நிற்கிறார்.







படகில் விக்கிரகத்தை ஏற்ற, படகு நதியில் செல்கிறது. சேனாதிபதியும் அணித்தலைவனும் அதன் பின்னே செல்கின்றனர்.






திடீரென மிருகங்கள் படகுக்கு அருகில் வருகின்றன.

மிருகங்களைப் பார்த்துக் கொண்டே படகு ஓட்டிய போது, திடீரென எழுந்த பலமான காற்றினால் படகு தத்தளிக்கிறது.



பலமாக காற்று தொடர்ந்து வீச, படகு மிகவும் ஆடுகிறது. மரக்கிளையைப் பிடித்துக் கொண்டு ஒரு வாலிபன் ஊஞ்சல் ஆடி வந்து விக்கிரகத்தைப் பிடித்துக் கொள்கிறான்.







காணாமற் போனவர்களை ஜபர்சிங்கும், அணித்தலைவனும் தேடுகின்றனர். அப்போது...









சூர்யா? இந்தப் பெயரை இதுவரை கேட்டதில்லை!
அடுத்த அம்பு வருமுன் நாம் தப்பி ஓடுவோம்!
வீரசிம்மன் தன் சேனாதிபதி சொல்வதைக் கேட்டு கோபம் அடைகிறான்.
தலைவரே! விக்கிரகம் காணாமல் போனதைப் பார்த்தால் ஏதோ மந்திரம் போல் இருக்கிறது!
என்ன உளறுகிறாய்? மாயமாவது மந்திரமாவது!
முட்டாள். நீ சொல்வதை நான் நம்ப மாட்டேன். உனக்கு வெட்கமாயில்லையா ஜபர்?
அவன் என்ன விரும்புகிறான்
தலைவரே! அன்று காட்டிலும் இதே போல் நடந்தது ஞாபகமிருக்கிறதா!
தனக்கு வரும் கோபத்தை வீரசிம்மனால் அடக்க முடியவில்லை.
ஜபர்! போதும் உன் பிதற்றல்! தேவி சிலையைக் கைப்பற்றிவர நான் வேறு யாரையாவது அனுப்பியிருக்க வேண்டும்.
ஜபருக்கு மிகவும் அவமானம் ஏற்படுகிறது.
அந்த விக்கிரகம் எங்கிருந்தாலும் அதைக் கொண்டு வர வேண்டும்.
சரி தலைவரே!
தொடரும்.



# சாஞ்சி ஸ்தூபம்

**போ**பாலிலிருந்து ஜான்சி செல்லும் இரயில் மார்க்கத்தில் கிட்டத்தட்ட 30 மைல் தூரத்தில் உள்ளது சாஞ்சி. பழைய புத்த விகாரங்கள் மிகுந்து காணப்படும் இ டம் ச ாஞ்சி. இ ங்குள்ளவற்றைப் போல், புத்த விகாரங்கள் இந்தியாவில் வேறு எங்கும் இல்லை. இங்குள்ள ஸ்தூபங்களைப் போல் பழமையான கட்டடங்கள் இந்தியாவில் வேறு எங்கும் கிடையாது. புத்த பகவானுடைய முக்கிய சீடர்களான சாரிசுதர் தோகல்லான் ஆகியோருடைய அஸ்தி அல்லது சாம்பல் இங்கு ஒரு ஸ்தூபத்தில் இன்றளவும் பத்திரமாகப் பாதுகாக்கப் பட்டு வருகின்றன. தங்கள் பொறுப்பில் பல ஆண்டுகளாக இவற்றை வைத்திருந்த ஆங்கிலேயர்கள் இறுதியில் 1949ஆம் ஆண்டு நம்மிடம் ஒப்படைத்தனர்.

சாஞ்சியிலுள்ள பெரிய ஸ்தூபி மிகவும் புகழ் பெற்றது. இத னுடைய சுற்றளவு 120 அடியும், உயரம் 54 அடியும் ஆகும். கல்லினால் வடிக்கப்பட்ட இந்த பிரம்மாண்டமான தூணில் புத்தமதக் கோட்பாடுகளும் அவற்றை விளக்கும் ஜாதகக் கதைகளும் பொறிக்கப்பட்டுள்ளன. ஸ்தூபத்தைப் பார்வையிட இதைச் சுற்றிக் கல்லினாலான ஒரு ஒற்றையடிப் பாதையும் அமைக்கப் பட்டுள்ளது. இதைச் சுற்றி பிரகாரமும் 28 ½ அடி உயரம் கொண்ட நான்கு வாயில்களும் அமைக்கப்பட்டுள்ளன. தெற்கு வாயிலின் சமீபத்தில் அசோகச் சக்கரவர்த்தியின் தர்ம சாசனங்களை அறிவிக்கும் கல்வெட்டுகள் உள்ளன.

கி.மு.250ஆம் ஆண்டில் அசோகச் சக்கரவர்த்தி உருவாக்கிய இந்த ஸ்தூபத்தைக் கண்டு, அயல்நாட்டவர்களும் இதைப் பாராட்டுகிறார்கள்.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்கள் விஞ்ஞானம்

### துரித புகைப்படம்

எட்வின் லாண்ட் என்பவர் தனது குடும்பத்துடன் உல்லாசப் பயணம் சென்றார். சென்ற இடத்தில் அவர் தனது மகள் ஜெனிஃபரை ஒரு புகைப்படம் எடுத்தார். சிறுமியான ஜெனிஃபர் உடனே தனது புகைப்படத்தைக் காண விரும்பியவுடன், எட்வின் திகைத்துப் போனார். புகைப்பட கேமராவை கிளிக் செய்தவுடனேயே எப்படி புகைப்படம் தெரியும்? அதை எவ்வாறு தன் மகளுக்குப் புரிய வைப்பது என்று யோசித்த எட்வினுக்கு ஏன் முயற்சி செய்து பார்க்கக் கூடாது என்று தோன்றியது. அப்படி அன்று அவருக்கு ஏற்பட்ட ஆ ர்வத்தின் வி ளைவாகத் தோன்றியதுதான் துரிதப் புகைப்படக் கலை.

அவருடைய அரிய முயற்சிகளின் விளைவாக, கிளிக் செய்தவுடன் புகைப்படம் தயார் செய்யும் க லை உருவானது. சாதாரணப் புகைப்படம் எடுக்க ஒரு சில வினாடிகளே தற்போது தேவை. துல்லியமாக எடுக்க சில நிமிடங்கள் பிடிக்கும்.



## உங்கள் சுற்றுப்புறம்

### ஜெட் விமானத்தின் வால்



விண்ணில் ஜெட் விமானம் பறக்கும் போது அதன் பின்புறம் ஒரு நீண்ட வால் போன்ற ஒன்று வெண்மை நிறத்தில் காட்சியளிக்கிறதே, அது என்ன தெரியுமா? வேறொன்றுமில்லை, ஜெட் விமானம் விடும் புகைதான் அது.

சாலையில் நாம் பொதுவாகக் காணும் வாகனங்கள் பு கை வி டுவதுபோல், ஜெட் விமானமும் புகை விடுகிறது. ஜெட் விமானம் பறப்பது மிக உயரத்தில். ஆதலால் அங்கு மிகக் குளிர்ச்சியாக இருக்கும். புகையிலுள்ள நீராவி உறைந்து பனித்துளியாகி, பின் படிகங்களாகி மெல்லிய நூல் போல் வெண்மையாகக் காணப்படுகிறது. பிறகு இந்த நூல் போன்ற பனிக்கட்டி படிகங்கள் காற்றில் கலந்து மறைந்து விடுகின்றன. இதனால் தான் கீழிருந்து நாம் பார்க்கும் போது பட்டத்து நூல் போலவும் ஜெட் விமானத்தின் வால் போலவும், தோன்றுகிறது.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்களுக்குத் தெரியுமா?

### பிரெய்ரீ நாய்கள்

பிரெய்ரீ நாய்கள் உண்மையில் நாய்களே இல்லை. அவை அணில் இனத்தைச் சேர்ந்தவை. சுமார் 30 செ.மீ வரைதான் உயரமே இருக்கும். அவை குரல் கொடுத்து சத்தமிடும் போது நாய் குரைப்பது போல் இருப்பதால், அவற்றுக்கு பிரெய்ரீ நாய்கள் என்று பெயர்.

கூட்டமாக வ சிக்கும் இ ந்த



அணில்கள், நாள் முழுதும் இரை தேடி உ ண்பதில் மு ம்முரமாக இருக்கின்றன. இ ரவில் த ங்கள் வளைகளுக்குள் சென்று உறங்கி விடும். இவை தங்களது குடும்பத்துடன் சேர்ந்து வாழ்கின்றன. இவ்வாறு பல குடும்பங்கள் சேர்ந்து ஒரே இடத்தில் வசிக்கும். இவற்றின் கூட்டுக் குடும்ப இருப்பிடம் மிகப் பெரியது. சில இருப்பிடங்களுக்கு 70 வாயில்கள் வரை உண்டு.

இவை ஒன்றையொன்று சந்திக்கையில் முதலில் முறைத்துப் பார்த்து, பற்களை நறநறவெனக் கடித்து ஒலி எழுப்பி, தங்கள் வால்களை ஆட்டுகின்றன.

## நம் இந்தியா

### சில பொது அறிவுக் கேள்விகள்

1. காந்தி சாகர் அணைக்கட்டு எங்கு உள்ளது?
அ) கோட்டா
ஆ) ராஞ்சி
இ) பக்ரா ஈ) கங்கா நகர்





2. எந்த நதி தார் பாலைவனத்தின் வழியாகப் பாய்கிறது?
அ) நர்மதா ஆ) தப்தி
இ) கோதாவரி ஈ) சிந்து

3. இந்திய யூனியனில் 22வது மாநிலமாக சிக்கிம் ஆனது எந்த ஆண்டு?
அ) 1955 ஆ) 1975
இ) 1965 ஈ) 1985





4. டெல்லி எப்போது யூனியன் டெரிடரியாக அறிவிக்கப்பட்டது?
அ) 1956 ஆ) 1946
இ) 1966 ஈ) 1976

(விடைகள் 70ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**


ANANTHA PRABHAKAR DUTT


KALANIKETAN BALU

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவுமே 2005 இதழில் வெளியிடப்படும்.

**போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.**

## வாழ்த்துகள்!

## பரிசு பெற்றவை

**ஜனவரி 2005 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

**விஜயலட்சுமி வெங்கடேசன்,**
**பழைய எண் 2/408, புதிய எண் 2/256**
**1வது தெரு, கற்பகாம்பாள் நகர்,**
**கொட்டிவாக்கம்,**
**சென்னை - 600 041.**



''நல்ல காலம் பிறக்குதென்று
சேதி சொல்லுவான்;
நல்ல காலம் பிறக்க
காணிக்கை வேண்டுவான்''

## நம் இந்தியா - விடைகள் (பக்கம் 69)

1. கோட்டா.
2. சிந்து.
3. 1975.
4. 1956.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

AMBULIMAMA (Tamil) March 2005 Regd No. TN/PMG(CCR)-592/03-05
Regd. with Registrar of Newspaper for India No.1095/57
Licensed to post without prepayment No.377/03-05 Foreign - WPP No.378/03-05



# இயற்கையின் விலை மதிப்பற்ற சொத்து



வீணாவின் தந்தையின் நண்பரான சஞ்சய் அரசு சார்பற்ற ஒரு நிறுவனத்தில் விஞ்ஞானியாகப் பணி புரிபவர். தண்ணீரின் சிக்கனப் பாதுகாப்பு பற்றிய ஒரு கருத்தரங்கில் கலந்து கொள்ள வந்திருந்தவர், வீணாவின் வீட்டுக்கும் வந்தார். ''மார்ச் 22ந் தேதியை தண்ணீர் சிக்கனப் பாதுகாப்பு தினமாகக் கொண்டாட ஜ.நா.சபை முடிவெடுத்துள்ளது பொதுமக்களிடம் அதைப் பற்றி விழிப்புணர்வை ஏற்படுத்துவதே அதன் நோக்கம். எங்கள் நிறுவனமும் அதைப்பற்றிய ஆக்கப்பூர்வமான பணிகளில் ஈடுபட்டுள்ளது'' என்றார்.

''அது அவ்வளவு முக்கியமான விஷயமா?'' என்று கேட்டாள் வீணா. ''ஆம். இயற்கை நமக்கு அளித்துள்ள சொத்துக்களில் விலைமதிக்க முடியாதது தண்ணீர். நமது பூமி 70 சதவீதம் தண்ணீரால் சூழப்பட்டிருந்தாலும் 99 சதவீதத்திற்கும் அதிகமான தண்ணீரை மக்களால் உபயோகிக்க முடியாது. மீதமுள்ள தண்ணீரும் நமக்குக் கிடைப்பதில்லை. குறைவாக உள்ள குடி நீரும் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருகிறது'' என்றார் அவர்.

''எனக்கு இதெல்லாம் தெரியாது மாமா! தண்ணீரை சேமிக்க நான் என்ன செய்ய வேண்டும்'' என்றாள். ''முதலில் தண்ணீரை தேவைக்கு மேல் பயன்படுத்தி வீணாக்கக் கூடாது. தோட்டத்துச் செடிகளுக்கு ரப்பர் குழாய் மூலம் தண்ணீர் பாய்ச்சுவதைத் தவிர்த்து, பூவாளியைப் பயன்படுத்த வேண்டும். அதுபோலவே, கார், ஸ்கூட்டர் ஆகியவற்றைக் கழுவி சுத்தம் செய்ய வேண்டும்'' என்றவர் தொடர்ந்து ''குழாயை தண்ணீர் சொட்டும்படி விடாமல் இறுக மூட வேண்டும். ஒழுகும் குழாய்களை உடனடியாகப் பழுது பார்க்க வேண்டும்'' என்றார்.

''இன்றிலிருந்து நான் தண்ணீரை வீணாக்க மாட்டேன்,'' என்றாள் வீணா.